“ஸ்டே:ஃப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள்-வசதிக்கு வசதி, சுகத்துக்கு சுகம், விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்கிறேன்”

## பெல்ட் இல்லை, நாடா இல்லை, கவலை இல்லை!



உரியுங்கள்...ஒட்டுங்கள்:
இறுக்கமாக அணிந்துள்ள பேன்ட்டியின்மீது ஒட்டுப் பகுதியை வைத்து அழுத்துங்கள்.

ஸ்டேஃப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள் இருந்துவிட்டால், பெல்ட், நாடா, ஊசி, ஹூப் என்று எதைப்பற்றியுமே நான் கவலைப்பட வேண்டியதில்லை. முண்டு, முடிச்சு கிடையாது. வெட்டு, கிராப்பு எதுவுமில்லை. எவ்விதமான அசௌகரியமும் இல்லை.

ஸ்டேஃப்ரீயில் உள்ள ஒப்பற்ற ஒட்டுப்பகுதி, நேப்கினைக் கச்சிதமாகப் பொருந்த வைக்கிறது. அணிவது சுலபம், மாற்றுவதும் எளிது. சாதாரண நேப்கினைவிட, ஸ்டேஃப்ரீ மிகவும் வசதியானது, சுகமளிப்பது.

ஸ்டேஃப்ரீ என் உடலோடு ஒட்டி உறவாடுவதுடன், உயர்ந்த பாதுகாப்பும் அளிக்கிறது. அதை அணிந்து என் மனம் விரும்பியதைச் செய்யமுடிகிறது. விரும்பியதை அணியவும், கவலையின்றி வெளியில், விரும்பிய இடத்திற்கு சென்றுவரவும் முடிகிறது.

**அதுமட்டுமா? உங்களுக்குத் தேவையான சுகாதாரப் பாதுகாப்பு அனைத்தும் கிடைக்கிறது.**

ஒரு முழு அளவு நேப்கினுள ஸ்டேஃப்ரீயில் அதிக உறிஞ்சும் தன்மை கொண்ட உள்-அடுக்குகள் அமைந்துள்ளன. அத்துடன் 3-வழி நீல நிற பிளாஸ்டிக் ஷீட்டும் இருப்பதால் கறை படியுமோ என்ற கவலை ஒருபோதும் இல்லை. மேலும் இதில் அதி மென்மையான விசேஷ ஓவர்ராப் அமைந்திருப்பதால் ஈர உணர்வு சிறிதுமின்றி எப்போதும் உற்சாகத்துடன் உங்களால் உலாவ முடிகிறது.




விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்திட...ஸ்டேஃப்ரீ

Johnson & Johnson

# "தமிழர்கள் எங்கள் துக்கங்களைப் பகிர்ந்து கொள்வதில்லை"

## பரல்தாக்கரேயுடன் பேட்டி

**ப**ம்பாயின் புறநகர்ப் பகுதியான பாந்திராவில் ஆள் நடமாட்டம் அதிகமில்லாத கலாநகர் என்னும் இடத்திலுள்ள ஓர் அமைதியான பங்களா. பங்களாவைச் சுற்றி மிகப் பெரிய தோட்டம். அதுதான் சிவசேனு தலைவர் பால்தாக்கரே வசிக்கும் பங்களா என்ருல் யாரும் நம்பமாட்டார்கள். ஆம்; அத்தனை பெரிய பங்களா வாசலில் ஒரு கூர்க்கா கூட இல்லை. டிராயிங் ரூமுக்குள் சென்றவுடன் நம் கண்ணில் படுவது பெரிய அளவிலான இவர் போட்டோவும், இவருடைய தந்தையின் போட்டோவும்தான். அடுத்துத் தெரிவது உலோகத்தாலான பெரிய கணபதி சிலை. அதனருகில் ஒரு சோபா. அதில் அமர்ந்துதான் பேசுகிருர். அவருக்குப் பின் பக்கமுள்ள சுவரில் மிகப் பெரிய 'புலி'யின் படம். அதன் எதிர்ச் சுவரில் மிகப் பெரிய சத்ரபதி சிவாஜி படம். பைப்பைப் பற்ற வைத்துக் கொண்டு 'பேட்டியை ஆரம்பிக்கலாமா' என்பது போல் பார்க்கிருர். பேட்டி ஆரம்பமானது.....



"பம்பாய் மாநகராட்சித் தேர்தலில் உங்கள் சிவசேனு கட்சி பெற்ற மாபெரும் வெற்றிக்கு என்ன காரணம் என்று கருதுகிறீர்கள்?"

"எங்கள் கட்சிக்கும், மக்களுக்கும் இருந்த உத்வேகம்தான் காரணம். மகாராஷ்டிரத்தில் ஒரு மகாராஷ்டிரக் கட்சி வெற்றி பெறுவது அதன் நியாயமான உரிமையல்லவா...!"

"உங்கள் கட்சி பிராந்திய உணர்வுகளைத் தூண்டிவிட்டுப் பெற்ற வெற்றிதான் இந்த வெற்றி என்று இ. காங்கிரஸார் சொல்கிருர்களே?"

"பிராந்திய உணர்வுகளைத் தூண்டிஞல் என்ன தவறு என்கிறேன்? கடந்த பொதுத் தேர்தலில் அவர்கள் எப்படி வெற்றி பெற்ருர்களாம்? இந்திராஜியின் மரணத்திஞல் மக்களிடம் ஏற்பட்ட இரக்க உணர்ச்சியை பயன்படுத்தித்தானே வெற்றி பெற்ருர்கள்!"

"மாநகராட்சித் தேர்தலில் உங்கள் கட்சி அமோக வெற்றி பெற்றுவிட்டது. இனி என்ன சாதனைகளைச் செய்யப் போகிறீர்கள்?"

"பம்பாயை அழகு படுத்துவதற்காக, வெறும் காகித அளவில் இருக்கும் திட்டங்களைச் செயல்படுத்த போகிறேம். சாலைகள், பூங்காக்கள், மரங்கள், கடற்கரை எல்லாமே அழகுபடுத்தப்பட வேண்டும். ஆனுல் ஒவ்வொரு நாளும் பம்பாயில் குடியேறிக் கொண்டிருக்கும் மக்கள் தொகை அதிகமாகிக் கொண்டே வரும்போது சேரிகள் பெருகிக் கொண்டே போகும்போது எப்படி நகரை அழகுபடுத்த முடியும்? அதற்காகத் தான் குடியேற்றங்களைக் கட்டுப்படுத்தவேண்டும் என்கிறேம். அப்போதுதான் நகரத்தின் தூய்மையும் அழகும் பாதுகாக்கப்படும் என்கிறேம்."



"குறிப்பாக நீங்கள் தமிழ் நாட்டிலிருந்து வந்து குடியேறிய தமிழர்களைத்தான் வெளியேற்ற வேண்டும் என்று பேசியிருக்கிறீர்கள். ஏன், தமிழர்களின்மேல் மட்டும் உங்களுக்கு அப்படியொரு கோபம்?"

"நான் இப்போது பேசிய பேச்சுக்கள் அனைத்துமே கொஞ்சம் அதிகப்படுத்தப்பட்டுப் பிரசுரமானதால்தான் நீங்கள் இப்படிக் கேட்கிறீர்கள் என்று நினைக்கிறேன். நான் ஒருபோதும் தமிழர்களைத் தாக்கிப் பேசவேயில்லை. அவர்களுடைய மனோபாவத்தைத்தான் தாக்கிப் பேசினேன். ஆம்; எத்தனையோ தமிழர்கள் மும்பய் (தாக்கரே அப்படித்தான் பம்பாயைக் குறிப்பிடுகிறார்) நகரில் வசிக்கிறார்கள். அவர்கள் அனைவருமே எங்களின் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளுகிறார்களே தவிர, எங்களின் துக்கங்களைப் பகிர்ந்து கொள்ளுவதேயில்லை. அந்த மனோபாவத்தைத்தான் நான் தாக்குகிறேன். இப்போது மும்பயில் ஏற்பட்டிருப்பது அதிகமான ஜனத் தொகையால் ஏற்பட்டிருக்கும் பொருளாதாரப் பிரச்னை. அதைத் தீர்த்தே ஆக வேண்டும். அதற்குத் தமிழர்கள் ஒத்துழைக்க வேண்டாமா? ஏன் நீங்களெல்லாம் தமிழகத்திலிருந்து மும்பய்க்கு வருகிறீர்கள்? தமிழகத்தில் இடமில்லையா? அங்கு அமைச்சரவையும் அமைச்சர்களும் இல்லையா? நீங்களெல்லாம் யாருமற்ற அனாதைகளா என்ன? மும்பய் நகர் என்ன அனாதை இல்லமா? எதற்காக இங்கே வரவேண்டும்? ஏழை மக்கள் பிழைப்புத் தேடி வேறு மாநிலங்களுக்குச் செல்வதென்பது தமிழகத்துக்கு தலைகுனிவு அல்லவா? இந்த நிலையைத்தான் நான் எதிர்க்கிறேன்! இந்த என் எதிர்ப்பு எல்லா மாநிலங்களுக்கும்தான், தமிழகத்துக்கு மட்டுமல்ல."

"பம்பாய் என்பது பல மாநில மக்களும் பல்வேறு வியாபாரங்களுக்காகவும், வேலை நிமித்தங்கள் காரணமாகவும் வாழும் ஒரு காஸ்மாபாலிடன் நகரம். அதில் மற்ற மாநில மக்கள் வெறியேற வேண்டும் அல்லது மற்ற மாநிலத்தவர்கள் வந்து குடியேறக் கூடாது என்று கூறுவது இந்திய ஒருமைப்பாட்டையே பாதிக்குமே!"

"மும்பய் போன்ற நகரங்களில் ஏற்படும் மக்கள் தொகைப் பெருக்கத்தால் ஏற்படும் பல்வேறு பிரச்னைகள் — சுகாதார கேடுகள் போன்றவற்றைப் பற்றி பிரதமர் ராஜீவ் காந்தியே பேசியிருக்கிறார். நகரங்களில் அளவுக்கதிகமான மக்களின் குடியேற்றம் கட்டுப்படுத்தப்பட்டே ஆகவேண்டும் என்று அவரேதான் பேசியிருக்கிறார். அதைத்தான் நாங்களும் சொல்கிறோம். அவர் சொன்னால் யாரும் குற்றம் கண்டு பிடிப்பதில்லை. நான் சொன்னால் தப்பாகிவிடுகிறது! மும்பய் போன்ற பெரு நகரங்களில் இத்தகைய குடியேற்றங்கள் நீடித்துக் கொண்டே போனால், எதிர்காலத்தில் அஸ்ஸாமில் ஏற்பட்டிருக்கும் பிரச்னை போல்தான் மற்ற மாநிலங்களிலும் பிரச்னைகள் தோன்றிவிடும் என்று எச்சரிக்கை செய்கிறோம். அதில் என்ன தவறு? இந்தப் பிரச்னை ஒரு பொருளாதாரப் பிரச்னைதானே தவிர இனப்பிரச்னை அல்ல! நான் மகாராஷ்டிரனாக நடந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தைப் பிறர் எனக்கு ஏற்படுத்துகிறார்கள். எல்லோருமே இந்தியர்களாய் நடந்து கொண்டால் நானும் இந்தியனாய் இருப்பேன்."

"உங்கள் சிவசேனாகட்சியின் இந்தக்கொள்கைக்கு மகாராஷ்டிரத்திலுள்ள சிலரே ஆதரவு தெரிவிக்கவில்லை என்று நான் சொல்கிறேன், நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"அவர்களெல்லாம் தங்கள் குழந்தைகளை 'டாடி, மம்மி' என்று அழைக்கக் கற்றுக் கொடுத்திருக்கும் கூட்டத்தவர்கள். அவர்கள் உழைப்பாளிகள் அல்ல. அதனால் நாங்கள் அவர்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை."

"உங்கள் கட்சி பம்பாயில் மட்டும்தானே இருக்கிறது? மற்ற இடங்களில் இல்லையே, ஏன்?"

"யார் சொன்னது அப்படி? மகாராஷ்டிரா முழுவதும் எங்களுக்குக் கிளைகள் இருக்கின்றன. அவற்றோடு ஹரியானா, பஞ்சாப், மத்தியப் பிரதேசம் ஆகிய இடங்களிலும் கிளை

கள் இருக்கின்றன. கல்கத்தாவிலும் ஒரு கிளை ஆரம்பிக்கப்பட வேண்டுமென்று அந்த மக்களே விரும்பி வந்து அழைத்திருக்கிறார்கள். அங்கும் விரைவில் ஆரம்பிக்கப்படும். உண்மையில் உங்கள் தமிழ்நாட்டில் மட்டும் தான் எங்களுக்குக் கிளை இல்லை!''

''தமிழ் நாட்டு அரசியலைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''நான் இங்கிருந்து கொண்டு அதைப் பற்றி எப்படிச் சொல்ல முடியும் என்று நினைக்கிறீர்கள்?''

''அங்கு பிராந்தியக் கட்சிகளே செல்வாக்கு பெற்று விளங்குகின்றனவே.... அது பற்றிக் கேட்கிறேன்?''

''அதில் என்ன தவறு? அந்த அளவில் எனக்கு அவர்களைப் பிடித்திருக்கிறது!''

''இந்திரா காந்தி கொலை செய்யப்பட்டபோது டெல்லியில் நடந்த கலவரங்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''உண்மையில், சீக்கியர்கள் அனைவரும் காலிஸ்தானை ஆதரிப்பவர்கள் அல்லர். காலிஸ்தான் கேட்கும் சில தனிப்பட்ட சீக்கியர்களின் பின்னால் பாகிஸ்தான் இருக்கிறது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அதைப் புரிந்து கொள்ளாமல் எல்லா சீக்கியர்களையும் நாம் எதிரிகளாகப் பார்ப்பது தவறு. அந்த வகையில் டெல்லி கலவரத்தில் எத்தனையோ அப்பாவி சீக்கியர்கள் பலியானது துரதிருஷ்டவசமானது!''

''பஞ்சாப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு நீங்கள் என்ன ஆலோசனைகளைச் சொல்ல விரும்புகிறீர்கள்?''

''நான் எதற்காக ஆலோசனைகளைச் சொல்ல வேண்டும்? நான் என்ன பிரதமரா என்ன?''

''இல்லையானாலும், பஞ்சாப் பிரச்னை இந்த தேசத்தின் பிரச்னை அல்லவா? அந்த வகையில் உங்கள் ஆலோசனை என்ன என்கிறேன்?''

''ராஜீவ் காந்தி ஒப்புக் கொள்வதாக இருந்தால் என் ஆலோசனைகளைக் கூறலாம். அல்லது என்னை ஓர் ஆலோசகராக நியமித்தால் கூறலாம். இவற்றில் எதுவுமே இல்லாமல் நான் எதற்காக ஆலோசனைகள் சொல்ல வேண்டும்?''

''சரி, நீங்கள் ஏன் தேர்தலில் போட்டியிடவில்லை?''

---

# லீவு! லீவு! லீவு!

— நெல்லை ஆ. கணபதி



சனியும் ஞாயிறும்
வாரத்தில் லீவு!
தவிர பன்ரெண்டுநாள்
கேசுவல் லீவு!

பிணியும் வந்திடில்
மெடிக்கல்லில் லீவு!
பேறு காலத்திற்கு
மெட்டர்னிட்டி லீவு!

இன்னும் ஊர் செல்ல
எல். டி. சி. லீவு!
யேர்ன்டு அன்யேர்ன்டு
என இரு லீவு!

பண்டிகை விழா எல்லாம்
அரசாங்க லீவு!
பற்றாது போனாலோ
லாஸ்ஆப் பே லீவு!

குவார்ட்டர்லி ஆப்ஏர்லி
தேர்வுக்கு லீவு!
கோடைக்காலம் எல்லாம்
பள்ளிக்கு லீவு!

பெரும்புயல் மழை வந்தால்
ஸ்பெஷலாக லீவு!
பெரியோர்கள் மறைவானால்
உடனேயே லீவு!



# வெளிப்படுங்கள். நம்பிக்கையுடன்.

# இன்டிமேட்®

# உள்ளாடைகளை அணிந்து




உங்களுக்காகவே விசேடமாக
தயாரிக்கப்பட்ட மென்மையான
பனியன்களும்— ஆண்மை வடி
வமைப்புக்கு ஏற்ற வகையில்
"ஹைப்பர்போலிக் பவுச்"
எலாஸ்டிக் உள்ளாடைகளும்
எல்லோருக்கும் பொருந்துமாறு
உருவாக்கப்பட்டுள்ளதால்
இன்டிமேட் ரகங்கள் அணிவதற்கு
தனி சுகமும் நம்பிக்கையுமளித்து
உங்களை சிறப்புடனும் வேக
மாகவும் செயல்படச் செய்கிறது.

எவரெடி நீட்டிங் & வீவிங்,
பாக்டரி திருப்பூர்.



தரமான
உள்ளாடைகளுக்கு

## இன்டிமேட்®



இன்டிமேட் ஷோரூம்: 30, லஸ் பஜார், சென்னை-600 004.
2-A/3, சிவப்பிரகாசம் தெரு, பாண்டி பஜார், சென்னை-600 017.

''நான் எப்போதுமே கிங் மேக்கராக இருக்க விரும்புகிறேனே தவிர, ராஜாவாக இருக்க விரும்பவில்லை!''

''மகாராஷ்டிரத்தில் நடக்கும் அரசியல் மாற்றங்களைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?''

''அது அவர்களுடைய கட்சிப் பிரச்னை. அதில் எதற்காக நாம் தலையிட வேண்டும்? எதுவானாலும் இப்போதைய மகாராஷ்டிர முதலமைச்சர் நேர்மையானவர்; ஊழல் அற்றவர். அதைப் பாராட்டத்தான் வேண்டும்!''

''நீங்கள் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக நடத்திக் கொண்டிருக்கும் 'மார்மிக்' வார இதழும் உங்கள் கட்சியின் வெற்றிக்கு ஒரு காரணம் என்று சொல்லலாமா?''

''நிச்சயமாக. அதுதான் எங்களின் மிகப் பெரிய ஆயுதம் என்று கூடச் சொல்லலாம்! நானே ஆர்வத்தோடு அதில் கார்ட்டூன் வரைகிறேன்.''

''தமிழகத்திலிருக்கும் 'கல்கி' வாசகர்களுக்கு ஏதேனும் சொல்ல விரும்புகிறீர்களா?''

'''கல்கி' பத்திரிகை பழம் பெரும் பத்திரிகை. அதை நீண்ட காலமாக நான் அறிவேன். என்றால் அதைப் படிக்க முடியாவிட்டாலும் அதில் வரும் அரசியல் கார்ட்டூன்களைப் பார்த்துப் பார்த்து ரசிப்பேன். ஒரு கார்ட்டூனிஸ்ட் என்ற முறையில் தமிழக கார்ட்டூனிஸ்ட்டுகளை நான் மிகவும் மதிக்கிறேன். நன்றாக வரைகிறார்கள். கல்கி வாசகர்களுக்கு மட்டுமல்ல, தமிழகத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் நான் கல்கி மூலமாகச் சொல்ல விரும்புவது இதுதான். நான் ஒவ்வொருவரிடமும் பேசி முடித்து விடை பெறும்போது, 'ஜெய் மகாராஷ்டிரா!' என்று கூறுவதுபோல், தமிழகத்திலுள்ள அனைவரும் 'வாழ்க தமிழ்நாடு!' என்று சொல்லப் பழக வேண்டும்!''

பேட்டியும், படங்களும்:

**செம்பூர் சந்துரு.**

அவர்: ''இது நான் எழுதிய முதல் சிறுகதை ஸார்!''
ஆசிரியர்: ''அதுக்காக பக்கத்துக்குப் பக்கம் சந்தனம் தடவி குங்குமப் பொட்டு வைக்கணுமா என்ன?''

—உ. ராஜாஜி



கஜினி முகமது கடைசியாக இந்தியாவின் மீது படையெடுத்த போது ஒரு பாசறையில் முகாமிட்டிருந்தான். இரவுநேரத்தில் தூரத்திலிருந்து தனது தளபதிகளோடு இந்திய வீரர்களின் படைவீடுகளைப் பார்த்தான். அப்போது அந்தப் படை வீடுகளில் தனித்தனி அடுப்புகள் எரிந்து கொண்டிருந்தன. ஏன் தனித்தனி அடுப்புகள் எரிகின்றன என்று கஜினி கேட்டான். வீரர்கள் தங்களுக்கான உணவுகளைச் சமைக்கிறார்கள் என்று தளபதி சொன்னான். ''ஏன், எல்லா வீரர்களுக்கும் ஒன்றாகச் சமைக்கக் கூடாதா?'' என்று கஜினி முகமது கேட்டான். ''ஒன்றாக இருந்து சாப்பிட அவர்கள் ஒருப்பட மாட்டார்கள்!'' என்று தளபதி பதில் சொன்னான். ''அப்படியானால் வெற்றி நமக்குத்தான்!'' என்றான் கஜினி முகமது.

—நாமக்கல் இரமேஷ்குமார்.



கணவன்: ''நீதான் என் இதயம்!''
மனைவி: ''அப்ப ராயப்பேட்டையில் நீங்க செட்டப் செய்திருக்கிற வனிதா யாரு... மாற்று இதயமா?''

—உ. ராஜாஜி.



# நீந்தவும் தெரியாத மீன்கள்

சந்தர்ப்பசூழ்நிலைகளின் சதி காரணமாக, பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்காத மரியதாசுக்கு, பள்ளிக்கூடங்களைக் கண்டாலே பிடிக்காதாம். ஊரில் புதிதாக வந்து ஆசிரியப் பொறுப்பு ஏற்கும் சாம்பசிவத்தைக் குடும்பத்தோடு விரட்டப்பார்க்கிறான் ரௌடி மரியதாஸ். குழந்தைகள் ராஜாவும், லட்சுமியும் மட்டுமல்ல, ஆசிரியரும் அன்பினால் அவன் உள்ளத்தை மாற்றிவிடுகிறார்கள். உடம்புக்கு வந்த மரியதாஸை, அவன் குணமடைந்த பிறகும் பிடிவாதமாகத் தன் வீட்டிலேயே மனைவியின் எதிர்ப்புக்கிடையே வைத்திருந்து சிசுருஷை செய்கிறார் ஆசிரியர். முரடனான மரியதாஸ் அடியோடு மாறிப் போய் விடுகிறான். இடையில், சாம்பசிவத்தின் திக்குவாய் மகள் சரஸ்வதி, மரியதாஸின் பால்ய சிநேகிதனான இன்ஸ்பெக்டர் சுந்தரை விரும்ப (ஏற்கனவே முதல் மனைவியை இழந்தவராம்), தன் தம்பி ரவிக்கு அவளைத் திருமணம் செய்து வைக்க சாம்பசிவத்தின் மனைவி பாக்கியம் துடிக்க....; முடிவு எப்படியோ வடிவெடுக்கிறது.

'கோபுரம் தாங்கும் பொம்மைகள்' போன்ற நாடகங்களைத் தந்து பரிசுகளும் பெற்ற நாடகமித்ராவா, 'நீந்தவும் தெரியாத மீன்களை' அரங்கேற்றியிருக்கிறது? என்று கேட்கத் தோன்றுகிறது. காரணம், கட்டுக்கோப்பான கதை இல்லாதது. நம்ப முடியாத பாத்திர அமைப்பு. அநுதாபத்தைத் தூண்டுவதாக நினைத்துக் கொண்டு அசட்டுத்தனமாகப் படைக்கப்பட்டிருக்கும் ஆசிரியர் பாத்திரம் ரசிகர்களின் கேலிக்கு ஆளாவது ஏன் என்று டைரக்டர் மாலி சற்று யோசித்துப் பார்ப்பது நல்லது.

"எப்போதும் பெண்கள் சப்ஜெக்டையா செய்கிறீர்களே," என்று முன்பு, ஒருமுறை விமர்சனத்தில் எழுதியது தப்புத்தான் மாலி. அதற்காக நீங்கள் இப்படி விஷப் பரீட்சை செய்ய வேண்டாம்.

'வரவர நாடகங்கள் கதையம்சத்திலும் நகைச்சுவையிலும் பஞ்சத்தில் அடிபட்டுத் தவிப்பதைப் பார்த்து அநுதாபம் கொண்டாரோ என்னவோ, டெல்லி கணேஷின் 'மாலை சூட வா!' நாடகத்தில் இரண்டுக்கும் குறையே வைக்காமல் அள்ளிக் கொடுத்து விட்டார் நாடகாசிரியர் ரமணி.

ஒரே அறையில் தங்கியிருக்கும் இரண்டு அந்நியோன்ய நண்பர்கள் — நாடக எழுத்தாளன் கணேஷ்; பெயருக்கு ஏதோ ஒரு வேலையிலிருக்கும் பாலு. கணேஷைக் கை தூக்கிவிட வருகிறாள் அவன் விசிறியான பணக்கார தேவி. தன் வீட்டையே விற்று அவன் எழுத்தைப் படமாக்க உதவுகிறாள். திரைக் கதாசிரியனாகி, இயக்குநராகி ஓகோ என்று உயர்ந்துவிடுகிறான் கணேஷ். ஆனால் இந்தத் தொழிலில் உள்ள போட்டி, போக்கிரித்தனங்கள் எல்லாவற்றையும் அறிந்த ஏகாம்பரம், பணக்காரத் தயாரிப்பாளர் எஸ். எம். எஸ். ஸின் பெண் ராதாவை அவனுக்குக் கல்யாணம் செய்து வைப்பதோடு, தேவியையும் நண்பன் பாலுவையும் அவனிடமிருந்து தந்திரமாகப் பிரித்து விடுகிறார்.

ஊட்டியிலிருந்து மனைவியை அழைத்து வரும் கணேஷுக்கு, கார் விபத்தில் தகப்பனாகும் பாக்கியம் பறிக்கப்படுகிறது. அகங்காரம் பிடித்த ராதாவோ முதலில் கருத்தரித்ததைக் கலைத்துவிடுகிறாள். பிரிந்து போன தேவி நர்சாக வருகிறாள் — அதே கணேஷுக்கு பணிவிடை செய்ய, கணேஷும் தேவியும் முன்பொருமுறை தங்களை மறந்து இருந்தபோது உருவான குழந்தையை அவனிடம் விட்டுவிட்டு உலகிலிருந்தே மறைகிறாள் தேவி.

'செமத்தி'யான கதையம்சம். 'ட்விஸ்ட்' வெகு இயல்பாக நாடகத்தோடு ஒட்டி வந்து கடைசியில் பளிச்சென்று நிற்கிறது. ரமணி மூளையைக் கசக்கிக் கொண்டாரானால், உருப்படியான மட்டுமல்ல, கடைசிவரை இருந்து பார்க்கும்படியான ஒரு நாடகத்தைத் தர முடியும் என்று நிரூபித்திருக்கிறார். நடிப்பில் யாரைக் குறிப்பிட்டாலும் குறிப்பிடாவிட்டாலும், முரளி மனோகரை அவசியம் குறிப்பிட்டாக வேண்டும்; அட்டகாசம் செய்திருக்கிறார் மனிதர், ஏகாம்பரமாக.

# மாலை சூட வா!



— சாருகேசி

# கர்நாடக இசை உலகம் கலகலத்துப் போனது!

பொதுவாகவே டிஸம்பர் மாதம்தான் கர்நாடக இசை உலகம், சூடான விவாதங்களிலும், விமர்சனக் குத்தல்களிலும், பரபரப்பாக இருக்கும். ஆனால் இந்த வருடம் ஜூன் மாதமே அந்த இசை உலகம், பரபரப்படைந்து பேசவும் இருக்கிறது. இரண்டு வித்வான்கள் சந்தித்தால் 'அந்த' விஷயத்தைப் பற்றித்தான் பேசிக் கொள்கிறார்கள். தொலைபேசிகளில் கண்டனங்கள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன.

''என்ன இப்படிச் செய்து விட்டார் நமது முதல்வர்?''

''பெரிய அதிர்ச்சி!''

''கர்நாடக இசை உலகத்தையே அவமரியாதை செய்தது போலிருக்கிறது!''

ஏன் இந்த அங்கலாய்ப்பு, பரபரப்பு?

விசாரித்தால்—

''நடிகை பானுமதியை தமிழ்நாடு இசைக் கல்லூரி முதல்வராகப் போட்டு விட்டார் முதல்வர்.''

இதுதான் விஷயம்!

வித்வான்களை அணுகி, இதில் என்ன தவறு?' என்று கிண்டி விட்டதும், என் மேல் பாயாத குறைதான்.

''என்ன ஸார் இது! அந்தம்மா பெரிய நடிகையாக இருக்கலாம். கர்நாடக இசையைப் பற்றி அந்தம்மாவுக்கு என்ன தெரியும்? யாரிடமாவது குருகுலவாசம் செய்து சங்கீதத்தைக் கற்றுக் கொண்டாரா? மக்கள் முன்பாக கச்சேரி செய்து, தன் வித்வத்தை நிலை நிறுத்தியிருக்கிறாரா? எவ்வளவோ பெரிய மேதைகள் இருந்த அந்த இடத்தில் ஒரு நடிகை இருப்பதை கொஞ்சம் கூடச் சகித்துக் கொள்ள முடியாது'' என்று முடித்தார்கள் பெயர் வெளியிட விரும்பாத அந்த வித்வான்கள்.

முதல்வர் ஏன் இந்த முடிவை எடுத்தார்? இசைக் கல்லூரி வட்டாரத்தில் விசாரித்த போது பல ருசிகரமான தகவல்கள் வெளியாகின. கடந்த நான்கைந்து வருஷங்களாகவே அங்கு நிலைமை சரியில்லையாம். பொதுவாகப் பார்த்தால், இந்த இசைக் கல்லூரி, கல்லூரி இயக்குனரின் கீழ்தான் வர வேண்டும். ஆனால் தமிழ் வளர்ச்சிக் கழகம், பண்பாட்டுத் துறை என்று பல கைகளில் மாட்டிக் கொண்டு தவிக்கிறது. தமிழ் பண்பாட்டுத் துறை இந்தக் கல்லூரியை தத்தெடுத்துக் கொண்ட பிறகுதான் அவலங்கள் ஆரம்பமாயின. எங்கும் எதிலும் தமிழ் என்று வெறி பிடித்த கூட்டம் ஒன்று இந்த கல்லூரி விஷயத்திலும் தலையிட்டது. சங்கீத மும்மூர்த்திகள் தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும்தானே கீர்த்தனைகளைப் பாடியுள்ளார்கள். எனவே, ''அந்த கீர்த்தனைகளை எல்லாம் குப்பைத் தொட்டியில் போடுங்கள்'' என்று கூறிவிட்டு, கோபால கிருஷ்ண பாரதி, பாரதிதாசன், அருணாசல கவிராயர், போன்றவர்களின் கீர்த்தனைகளுக்கும், தாயுமானவர், அப்பர் போன்றவர்களின் பாடல்களுக்கும் பாடத் திட்டத்தில் முக்கியத்துவம் தந்தது. இதில் வேடிக்கை (வேதனை!) என்னவென்றால், தமிழில் பிரபலமான கீர்த்தனைகளைப் பாடிய பாபநாசம் சிவன் பாடல்கள் தீண்டத் தகாதவை ஆகிவிட்டன!

இந்த விஷயங்களெல்லாம் முதல்வர் காதில் விழுந்திருக்கின்றன. இசை வளர வேண்டுமானால், அந்த இடத்தில், எந்த நிர்ப்பந்தங்களுக்கும் அடிபணியாத ஒரு நபரைப் போட வேண்டும் என்று தீர்மானித்திருக்

* ''பதவியின் பெருமையை நிச்சயம் உயர்த்த முடியும்.''



கிறார். இதன் விளைவுதான் பானுமதி நியமனம். இந்த நியமனத்தைப் பற்றி இசைக் கல்லூரியிலேயே பணிபுரிந்து கொண்டிருக்கிற சில சீனியர் வித்வான்களை விசாரித்தோம்.

''ஆமாம் சார், 'செம்மங்குடியை போடக் கூடாதா? தியாகராசன் இல்லையா? எம். எல். வியைக் கூட்டிப் போடலாமே? சீர்காழியும், மதுரை சோமுவும் என்ன தகுதி குறைந்தவர்கள்?' என்று சொல்கிறார்கள். ஒருவராவது 'கல்லூரியில் உள்ளவர்களிலேயே சீனியராக உள்ளவரைப் போட்டிருக்கலாமே' என்று கூறவில்லை பாருங்கள்!'' என்கிறார்கள் இவர்கள்

அவர்களே தொடர்ந்து பேசுகிறார்கள்: ''முதல்வராக இருப்பவர் கர்நாடக சங்கீதம் முழுமையாகத் தெரிந்து, கச்சேரி செய்தவராக இருக்க வேண்டும் என்று யார் சொன்னது? இது கிட்டத்தட்ட நிர்வாகப் பதவிதான். டி. என். கிருஷ்ணன் முதல்வராக இருந்த போது வாரத்திற்கு ஒரு தடவை வகுப்பு எடுத்தாலே பெரிய விஷயம். கல்லூரி ஆரம்பித்த புதிதில் முசிறி சுப்பிரமணிய அய்யர், சந்தியாவந்தனம் சீனிவாசராவ் போன்றவர்கள் வகுப்பெடுத்தார்கள். வர, வர அந்த நிலைமை மாறிவிட்டது. நிர்வாக வேலைகளே ஏகமாய்ப் பெருகி விட்டன. பானுமதியை இப்போது போட்டிருக்கிறார்கள். சற்றுப் பொறுமையோடுதான் இருந்து பார்ப்போமே, அந்த அம்மையார் எப்படி இந்தக் கல்லூரியை நடத்தப் போகிறார் என்று. முன் கூட்டியே எதற்காக நாம் ஒரு கருத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்? இந்தப் பதவி அரசாங்கப் பதவி போன்றது. 58 வயது வரை இருக்கலாம். ஆனால்டி.என்.கிருஷ்ணனே 56 வயதிலேயே விலகிக் கொண்டு விட்டார். பானுமதி அவர்களுக்கு மூன்று வருடம்தான் ஒப்பந்தம் போட்டிருக்கிறார்கள். இது முதல்வர் விருப்பத்தின் பேரில் நடந்த விஷயம் என்று தெரிந்தவுடன் இதுவரை எங்கள் கல்லூரியில் படாதபாடு படுத்திக் கொண்டிருந்த கோட்டை அதிகாரிகள் அந்தம்மா வீட்டிற்கு அலறியடித்துக் கொண்டு ஓடி, ஒரு விருந்து வேறு கொடுத்துள்ளார்களாம். இனிமேல் எங்கள் கல்லூரியில் எந்த அதிகாரியும் தலையிட முடியாது. பானுமதி ஒரு கண்டிப்பான பெண்மணி. இந்த கல்லூரி மேலும் வளர்வதற்கு அவர் பணி பயன்படப் போகிறது'' என்கிறார்கள்.

சரி, பானுமதி ராமகிருஷ்ணா என்ன சொல்கிறார் என்று பார்க்கத் தொலைபேசியில் தொடர்பு கொண்டோம்.

''அம்மா பூஜை செய்கிறார்கள். மத்தியானம் வாருங்கள்'' என்று பதில் வந்தது: சந்தித்தோம்.

''இன்னிக்குக் கூட ஹிந்துவில் லெட்டர் எழுதியிருக்கிறார்கள். என் குடும்பமே கர்நாடக இசைக் குடும்பம். என் அப்பா இசை வித்வான். நான் முறைப்படி சங்கீதம் பயின்றவள். எத்தனையோ தெலுங்குப் படங்களில் சொந்தக் குரலில் கர்நாடக சுத்தமான ராகங்களில் கீர்த்தனைகளைப் பாடியுள்ளேன். அது இந்த வித்வான்களுக்குத் தெரியுமா? தொடர்ந்து இரண்டரை மணி நேரம் கச்சேரி செய்தால்தான் வித்வானா? எனக்கு சங்கீத ஞானம் உண்டு. நிறைய தன்னம்பிக்கையும் இருக்கு. நிர்வாக அனுபவமும் பெற்றிருக்கிறேன். என்னால் அந்தப் பதவியின் பெருமையை நிச்சயம் உயர்த்த முடியும்'' என்றார் பானுமதி.

''நாம் தமிழ்க் காதலர்களே. ஆனால் சங்கீத மும்மூர்த்திகளுக்கு முக்கியத்துவம் தராத கர்நாடக சங்கீதப் பயிற்சி உப்பில்லாப் பண்டமே என்பதை உணர்ந்திருக்கிறோம். அந்தக் கல்லூரியில் தமிழ்க் கீர்த்தனைகளைத்தான் பாடமாக்க வேண்டும் என்று ஒரு கூட்டம் சொல்லிக் கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியுமா?''

* பெயர்ப்பலகை இல்லாமல் ஒரு கல்லூரி.



''சங்கீதம் மொழியைக் கடந்தது. இந்த மாதிரியான வெறித்தனத்தை ஒழிக்க வேண்டும்'' என்றார் பானுமதி.

எம். ஜி. ஆர். உடல்நலம் பெற்றுத் திரும்பியதும் சந்தித்த போது, ''என்ன செய்றீங்க?'' என்று விசாரித்தாராம். ''நல்ல கேரக்டர் ரோல் வந்தால் செய்கிறேன். மற்றபடி என் ஸ்டூடியோ, தியேட்டர் என்று நிர்வாக வேலைகளைச் செய்து வருகிறேன்'' என்று கூறினாராம் பானுமதி. டீ. வி. யில் ரத்னகுமார் படத்தைப் போட்டதும் முதல்வருக்கு யோசனை தோன்றியிருக்கிறது. அந்தப் படத்தில் நிறைய கர்நாடக சுத்தமான பாடல்களைப் பானுமதி சொந்தக் குரலில் பாடி நடித்திருக்கிறார். ஜானகி அம்மாள் ஃபோன் செய்து ''உங்களுக்குள்ள இசைத் திறமையை முதல்வர் போற்றிக் கொண்டேயிருக்கிறார்'' என்று கூறினாராம். சில காலம் சென்று இந்தப் பதவி வந்தது. ''நான் கர்நாடக சங்கீதம் பாடிய முழுக் கேசட்டை முதல்வருக்கு கேட்கக் கொடுத்துள்ளேன்'' என்றார் பானுமதி.

ப்ரியன்.

படங்கள்: எட்வர்ட் (சுபா).


சிங்கள ராணுவம்


பயங்கரவாதி
இவர் தான் பலசாலி! இவரைப் பின் பற்றுவோம்! இப்படி வாங்க!
இந்திய ஒருமைப் பாட்டைக் காப்போம்! ஹிந்து-சீக்கிய ஒற்றுமை வளர்ப்போம்
சமரச பேச்சு வார்த்தைகள்


காமராஜ் பள்ளி
மழைக்கு ஒதுங்கினது போதாது... நல்லா படிச்சு பாஸ் பண்ணுங்க!
இ-காங்கிரஸ்



கல்கி

1985 ஜூன் 30
மலர் 43 இதழ் 48
குரோதன ஆனி 16



# சோவினால் வந்த வினை!

எல்லாம் இந்த சோவினால் வந்த வினை! அவர் ஏதோ எம். எல். ஏக்களைப் பற்றித் தமது பத்திரிகையில் எழுதப் போக, அது பற்றிய உரிமைப் பிரச்னை சட்டசபையில் எழ, ரகுமான்கான் தாம் பேச அனுமதிக்கப்பட வேண்டும் என்று பிடிவாதம் செய்ய, சபாநாயகர் பொங்கியிருக்கிறார். அற்ப சொற்பமாகப் பொங்கவில்லை! ''குட்டை பொங்கினால் ஏரியில் திருப்பலாம், ஏரி பொங்கினால் ஆற்றில் திருப்பலாம், ஆறு பொங்கினால் கடலில் திருப்பலாம், கடலே பொங்கினால் என்ன செய்வது?'' என்று அமைச்சர் நெடுஞ்செழியன் சபாநாயகரின் கோபத்தைப் பார்த்துக் கையைப் பிசைந்து கொண்டு கேட்கும் அளவுக்குப் பொங்கியிருக்கிறார்! அவரது மைக்கை அணைத்து விடவும் நேர்ந்திருக்கிறது!

மே'ஸ் பார்லிமெண்டரி பிராக்டிஸஸ் என்ற புத்தகம் சட்டசபைக்கு வேதம் போல.. அதில் விவரிக்கப்பட்டுள்ள சம்பிரதாய விதிமுறைகளின் அடிப்படையில்தான் பிரிட்டனிலும் இந்தியாவிலும் சட்டமன்ற, நாடாளுமன்ற நடவடிக்கைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. சட்டசபையில் எதையும் பேசலாம் என்று எம். எல். ஏக்களுக்கு உரிமை வழங்கப்பட்டுள்ளது. சாட்சியம் ஏதும் இல்லாமலே அமைச்சர்கள் அதிகாரிகள் மீது பழி சுமத்தலாம். தட்டிக் கேட்கலாம். எம். எல். ஏ. மீது மானநஷ்ட வழக்குத் தொடுக்க முடியாது. அதையே அவர் சட்டசபைக்கு வெளியே பேச முடியாது. எதற்காக இந்தச் சலுகை? எல்லாக் குற்றச்சாட்டுக்களையும் ஆதாரத்துடன் நிரூபிப்பது கடினம். எனவே அதிகாரத்தில் உள்ளவர்கள் அஞ்சி நடக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்த உரிமை மக்கள் பிரதிநிதிகளுக்கு வழங்கப்படுகிறது. ஆனால் அதேநேரத்தில் ஆட்சியிலிருப்போர் மீது அவதூறு சுமத்துவதற்காகவே சிலர் இந்த உரிமையைத் துஷ்பிரயோகம் செய்யலாம் என்பதும் உணரப்பட்டதால் சபாநாயகர் விரும்பினால் சபை நடவடிக்கைகள் சிலவற்றைப் பதிவேட்டிலிருந்து நீக்கிவிடலாம் என்றும் விதித்தார்கள். ஆனால் எம். எல். ஏக்களின் இந்த உரிமைகளும் சபாநாயகரின் அதிகாரமும் இந்த அளவுக்கு துஷ்பிரயோகமாகும் என்று சட்டமன்ற வேதம் எழுதிய மே கூட எதிர்பார்த்திருக்க மாட்டார். அப்படி எதிர்பார்த்திருந்தால் இப்படி சட்டமன்றத்தில் பேசப்பட்டதையெல்லாம் மூடி மறைத்துவிட முடிவதை விட, மக்கள் தங்கள் பிரதிநிதிகள் எப்படி எப்படியெல்லாம் நடந்து கொள்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வதே மேல் என்று கூடக் கருதியிருக்கலாம்!

தம்முடைய கோபாவேசச் சொற்களைத் தாமே பதிவேடுகளிலிருந்து நீக்கிய சபாநாயகரின் செயலைப் பார்க்கும் போது, அவரது குண இயல்பு முன்பே அனைவரும் அறிந்ததுதான் என்பதையும் எண்ணும் போது,

இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்.

என்ற குறள் அ. தி. மு. க. தலைமைக்குத் தெரியாமல் போய்விட்டதோ என்றுதான் வருந்த வேண்டியிருக்கிறது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தா'யென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.

# துட்டு செலவில்லாமல் ஒரு எல்.கே.ஜி. ஸீட்?



* பாராட்டுக்குரியவர்.



* லட்சம் அங்கத்தினர்கள்.



* இவர் இடத்தை...



* காத்திருக்கிறார்.

* ஏ. சங்கர வடிவேலன், வேதாரண்யம்.
? பாரி வள்ளலுக்கும் கர்ணனுக்கும் என்ன வித்தியாசம்?

! இருவரும் வள்ளல்கள்தான். ஆனால் பாரி அரசன். அதனால் அவன் செய்த தான தர்மங்கள் அரசாங்க கஜானாவைக் காலி செய்வதாக இருந்திருக்கலாம். ஆனால் கர்ணன்? அவன் அரச குடும்பத்தில் பிறந்திருந்தாலும் அரசன் அல்ல. தனது சொந்தச் செல்வங்களைத்தான் — பிறவியிலேயே இருந்த கவச குண்டலங்கள் உள்பட தானம் செய்தான். இந்த வித்தியாசத்தின் அடிப்படையில் கர்ணனே நமது மதிப்பில் உயர்கிறான்.

* எஸ். பி. ஸ்ரீதர், கும்பகோணம்.
? பழைய செருப்புடன் கல்யாண சத்திரம் போய்விட்டுப் புதிய செருப்புடன் திரும்பியதுண்டா?

! இல்லை. புத்தம் புதிய செருப்புடன் கல்யாண மண்டபம் போய்விட்டு வெறும் காலுடன் திரும்பியதுண்டு. ஏன் ஸார், ஒரு வேளை நீங்களும் அந்தக் கல்யாணத்துக்கு வந்திருந்தீர்களா?

* எஸ். ரவி, கும்பகோணம்.*
? தற்போது நாட்டில் சட்டம் ஒழுங்கு எப்படி?

! அவ்வப்போது தலைவர்களைப் படுகொலை செய்ய முயற்சிகள் நடக்கிறது. டிரான்ஸிஸ்டர் குண்டுகளை வைத்து ஒரு பாவமும் அறியாத மக்கள் சில போது கொல்லப்படுகிறார்கள். பழிவாங்கும் படலமாக ஒரு மதத்தவர் மற்றொரு மதத்தவரைத் தாக்கிக் கொன்றும் தீயிட்டும் கொள்ளையடித்தும் வெறி தணிகிறார்கள். அண்டை மாநிலங்களைச் சேர்ந்த போலீஸார் ஒருவர் மீது ஒருவர் யுத்தம் தொடுத்துப் போர் புரிகிறார்கள். முகமூடிக் கொள்ளையர் கனஜோராகத் தங்கள் திடீர் தாக்குதல்களைத் தொடர்ந்து நடத்துகிறார்கள். சிறைச்சாலை அதிகாரிகள் அரசியல் கைதிகளின் மண்டைகளை உடைக்கிறார்கள்; எலும்புகளை முறிக்கிறார்கள். இட ஒதுக்கீடு தொடர்பான போராட்டங்கள், அதையொட்டிய கலவரங்கள், பத்திரிகைக் காரியாலயங்களில் போலீஸ் புகுந்து நடத்தும் அதிகார துஷ்பிரயோகங்கள் இப்படியாகச் சில பல சட்ட ஒழுங்கு பிரச்னைகள் தவிர மற்றபடி நாட்டில் அமைதியான சகஜ நிலைதானே நிலவுகிறது! சட்டசபை அவ்வப்போது அமளி துமளிப் படலாம். அதைப் போய்ப் பெரிதுபடுத்த முடியுமா என்ன?

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
எஸ். ரவி,
30, காமாட்சி ஜோசியர் தெரு,
கும்பகோணம்—612 001.

* எஸ். ஆர். லதா, அய்யம்பேட்டை.
? "தகுதியானவர்களை தகுதியான காரியத்துக்குப் பாராட்டும்போது கூட கஞ்சத்தனம் வந்து புகுந்து கொள்ளத்தான் செய்கிறது"—முற்றிலும் உண்மை. பாரதப் பிரதமர் ராஜீவ் காந்தி விஷயத்தில் தாங்கள் அப்படித்தானே நடந்து கொள்கிறீர்கள்?

! கேள்விகள் அடிப்படையில் பதில் கூறும் தராசுக்குப் பிரதமரை வாழ்த்த அதிக வாய்ப்புக் கிட்டாமல் போயிருக்கலாம். ஆனால் கல்கி தகுதியான காரியத்துக்கு அவரைப் பாராட்ட என்றும் தயங்கியதே இல்லை, என்பதைக் கவனித்திருப்பீர்களே.

* வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னை—24.
? சாராய வியாபாரத்தை ஏற்றுக் கொள்ளும் அரசு விபசார விடுதிகளையும் நடத்த முன் வந்தால்...?

! விடுதி வாசலில் சின்னதாக ஒரு போர்டு தொங்கும்: "எச்சரிக்கை: விபசாரம் வீட்டைக் கெடுக்கும்; உடல் நலனுக்கும் ஊறு விளைவிக்கும்."

* கோ. மீனவன், காட்பாடி.
? வாரத்தில் ஐந்து நாள் வேலையும் — 10 முதல் 5.30 வரை வேலை நேரமும் தேவையா?

! ஏன், அது கூடத் தேவையில்லை என்கிறீரா?

* ஹேம தாசன், உடையார் கோயில்.
? காதலால் அதிகம் பாதிக்கப்படுவது ஆணா, பெண்ணா?

! "நான் அன்புடன் நேசித்த ஒருத்தியை அவள் என்னை விரும்பாததால் மறப்பதற்கு என்ன வழி?" என்ற உங்களுடைய அடுத்த கேள்வியைப் பார்க்கும் போது காதலால் அதிகம் பாதிக்கப்படுவது ஆண் என்றுதான் தோன்றுகிறது!

* எம். இராஜேந்திரன், லால்குடி.
? கோடி கோடி ரூபாய்களாக வெளிநாட்டிடமிருந்து வாங்கிய கடனை இந்தியாவால் திருப்பி அடைக்க முடியுமா?

! வாங்கிய கடனை லாபகரமானதும் ஏற்றுமதிக்கு அதிக வாய்ப்பளிக்கிற தொழில்களிலும் முதலீடு செய்து திருப்பி அடைக்க முடியும். உலக யுத்தத்துக்குப் பிறகு, அமெரிக்காவுக்கு ஜப்பான் கடன் பட்டிருந்தது போக இப்போது அமெரிக்கா ஜப்பானுக்குக் கடன்பட்டிருப்பதைக் காண்கிறோமே!

* ஆர். நாகராஜன், செம்பனார்கோயில்.
? ஒரு லட்சம் உறுப்பினர்கள் காங்கிரஸில் சேர்க்கப்படுவார்கள் என மூப்பனார் கூறியுள்ளதை இந்த வருடத்தின் நகைச்சுவையாகக் கருதலாமா?

! ஒரு லட்சம் என்பது பெரிய விஷயமே யல்ல. இந்த வருஷம் முடிவதற்குள் இதைக் கூட சாதிக்க முடியாமல் போனால் அது நிச்சயம் நகைப்புக்குரிய விஷயம்தான்.

* ஜே. சிவகுமார், நாகப்பட்டினம்.
? துட்டு செலவில்லாமல் ஒரே ஒரு எல். கே. ஜி. ஸீட் சென்னையில் தங்களால் வாங்கித் தர முடியுமா?

! 'ஏன் முடியாது? இதென்ன பிரமாதம்?' என்று நினைத்துக் கொண்டுதான் என் நண்பர் பிரின்ஸிபல்லாக இருக்கும் ஒரு பள்ளிக்குள் சிபாரிசு செய்ய நுழைந்தேன். இரண்டாயிரம் கேட்டார். "என்னய்யா நண்பனிடம் கூடவா?" என்றேன். "நீ நண்பனாய் இருப்பதால்தான் இரண்டாயிரம்; இல்லையென்றால் இந்த ஸீட்டுக்கு எனக்கு ஐயாயிரம் கிடைக்கும்!" என்றார். ரேட்டைக் குறைக்க முடிந்ததே சாதனைதானே!

# நீங்கள் கேட்டவை — தராசு

* ரேவதி பிரியன், ஈரோடு.
? தென்றல் நாயகி ஜெயஸ்ரீ, ரேவதியின் இடத்தைப் பிடிப்பாரா?

! அப்படி பிடித்தால் நீங்கள் ஜெயஸ்ரீ பிரியன் என்று பெயரை மாற்றிக் கொள்வீர்களா?

* கொடுமுடி கணேசன், சேலம்.
? மசாலா படங்கள் எடுக்க மாட்டேன், ரசிகர்களின் இந்த ரசனை மாறும் வரை காத்திருப்பேன் என்று கூறும் கோமல் சுவாமிநாதன் பற்றி...?

! இதில் பெருமை இருப்பதாக நான் கருதவில்லை. மக்களுடைய ரசனையையும் திருப்தி செய்து தரமுயர்ந்த படங்களை எடுக்க முடியாது என்று எண்ணுவதற்கில்லை. தண்ணீர் தண்ணீர் போன்ற பல படங்களை உதாரணம் காட்ட முடியும்.



பெண்ணின் தகப்பனார்: மாப்பிள்ளை சீர் திருத்தக் கல்யாணம்தான் செய்து கொள்வேன் என்கிறாரா? அப்படியானால் நமக்கு ஒரு பைசா செலவில்லை என்று சொல்லு.

தரகர்: ஆனால் அந்தக் கல்யாணத்துக்குத் தலைமை தாங்க மந்திரியை அழைக்கணுமாம். அவருக்கு ரூபாய் இருபதாயிரமும், அவரது கட்சி நிதிக்கு ரூபாய் பத்தாயிரமும் நீங்க தான் கொடுக்க வேண்டியிருக்கும்!

— எஸ். கிருஷ்ணமூர்த்தி

42,470 முட்டைகளைக் கொண்டு பிரான்ஸ் தேசத்தில் உலகிலேயே மிகப் பெரிய ஆம்லெட் செய்தார்கள். அந்த நகரின் பின்கோடும் முட்டைகளின் எண்ணிக்கையும் ஒன்றே. அவர்கள் அந்த ஆம்லெட்டை 80 கிலோ வெண்ணெய், 80 லிட்டர் எண்ணெய், 18 கிலோ உப்பு, 20 லிட்டர் புதிய பால் ஏடு ஆகியவற்றை உபயோகித்து ஒரு பெரிய மைதானத்தில் தயாரித்தார்கள். இதைச் செய்வதற்கென்றே 400 கிராமவாசிகள் சேர்ந்து உருவாக்கிய வாணலியை உபயோகித்தார்கள். ஆம்லெட் தயாரானதும் அதை 10,000 பேர்களுக்கு இலவசமாகப் பகிர்ந்து அளித்தார்கள்.

— கே. ரகுராம்

ஆ! ம்லெட்!



"என்னுடைய 40 வருட டிரைவர் சர்வீஸில் ஒரு சிறிய விபத்து கூட ஏற்பட்ட இல்லீங்க!"

"ஆச்சரியம்தான். நீங்க கார் டிரைவரா? லாரி டிரைவரா?"

"ரோட் எஞ்சின் டிரைவர்!"

— சம்பத்குமாரி

சேகர்: பில்லியனில் உட்கார்ந்திருக்கும் அந்த ஆள் ஏன் ஸ்கூட்டரின் இடது பக்கத்தைக் கையால் தட்டி ஒலி எழுப்பிக்கொண்டே செல்கிறார்?

சுந்தர்: அந்த ஆள் லாரியில் கிளீனராக வேலை பார்க்கிறவர்!

— எஸ். கிருஷ்ணமூர்த்தி.



# மிக்ஸர்!



அண்மையில் ஆறுமுக நேரியிலிருந்து நாசரேத் செல்லும் தனியார் பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்தேன். நீண்ட நேரம் பஸ்ஸை நிறுத்தி வைத்து டிக்கட்டுகளைச் சரி பார்த்துக் கொண்டிருந்த கண்டக்டர் கத்தினார்: "இன்னும் யார் சார் ரெண்டு பேர் டிக்கட் வாங்காதது?"

என் அருகிலிருந்த கிராமவாசி பொறுமையிழந்த நிலையில் "நீயும் டிரைவருமாய்த்தானிருக்கும். சீக்கிரம் எடுய்யா வண்டியை!" என்றார்.

— ஜெயின் சேகர்.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

12

# ஜமீன்தாரி ஒழிப்பு மசோதா

சட்ட சபையின் ஜமீந்தாரி ஒழிப்பு கமிட்டி தலைவராக இருந்து அறிக்கை தயாரித் தளித்தார் பிரகாசம். மந்திரிசபையின் பதவிக் காலத்தில் பிரகாசம் புரிந்த குறிப்பிடத்தக்க சாதனை இது. ஒன்றரை ஆண்டு காலத்தில் 18 பகுதிகள் கொண்ட அறிக்கையையும், குடியானவர்கள் மற்றும் குத்தகைதாரர்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் மசோதாவையும் தயாரித்து அளித்தது கமிட்டி. பிரகாசம் இவற்றை அவையில் சமர்ப்பித்தபோது காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் பலத்த கரகோஷம் செய்தனர். ஆனால் சட்டசபையில் இருந்த நிலப் பிரபுக்களும் ஐரோப்பியர்களும் இந்த மசோதா நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து நிலத்தை அபகரிக்க வழிவகுப்பதாகக் கூறி வன்மையாக எதிர்த்தனர். இந்த மசோதா வெறுப்பினால் தோன்றி, பொறாமையால் உருவெடுத்து, பழிவாங்கும் உணர்வால் பிறந்தது என்றார் லாங்லி.

ஜமீன்தார்களுக்கு மார்க்கெட் நிலவரப்படி நஷ்ட ஈடு அளிக்கும் யோசனையை ஸி. ஆர். உறுதியாக நிராகரித்தார். "பிரிட்டிஷார் எந்த நோக்குடன் ஜமீந்தாரி முறையை ஏற்படுத்தினார்களோ அது நிறைவேறவில்லை. முற்றிலும் திரிந்து போய் நியாயமற்றதாகி விட்டது. அநியாயங்களுக்கு முடிவுகட்டும் போது நஷ்ட ஈடு கொடுக்கப்படுவதில்லை. முன்பு உலகின் மறு பக்கத்தில் ரொம்பவும் மதிப்புள்ள சொத்துக்களை வைத்திருந்தனர். அடிமைகளை வைத்திருந்தனர். அடிமைத் தளை ஒழிக்கப்பட்டபோது நஷ்ட ஈடு வழங்கப் பட்டதா என்ன? எனக்குத் தெரிந்த அளவில், அடிமைத் தளை ஒழிப்புக்கு முந்தைய வருடம் ஆயிரக்கணக்கான அடிமைகளை ஏராளமாய்ப் பணம் கொடுத்து எத்தனையோ பேர் வாங்கியிருந்தனர். எனினும் அடிமைத்தளை ஒழிப்பின்போது நஷ்ட ஈடு ஏதும் யாருக்கும் வழங்கப்படவில்லை. ஜமீன்தாரி ஒழிப்பினால் ரொம்பவும் பாதிக்கப் பட்டவர்களுக்கு ஓரளவு நிதியுதவி வழங்கப் படலாம். ஆனால் நிச்சயமாக நஷ்ட ஈடு தர முடியாது."

கிருஷ்ணமாச்சாரி ஒரு முக்கியமான விஷயத்தைச் சுட்டிக் காட்டினார்: "இந்த மசோதா உழுபவனுக்கு உதவவில்லை" என்றார். "ஜமீந்தாரி முறையை ஒழிக்க இந்தச் சீர்திருத்தம் முற்பட்டாலும் அதனால் உழைப்பாளிக்கு எந்த விதமான நன்மையும் இல்லை."

ஸி. ஆர். இதை ஒப்புக் கொண்டார்: "நாம் உழுவர்களுக்கு ஆற்றவேண்டிய கடமைகள் இன்னும் நிறைய இருக்கின்றன. காலம் வரும்போது அவற்றை முறைப்படி கவனிப்போம்" என்றார். ஜமீந்தார்களுக்குக் கிடைத்து வந்த வருவாயை நிலமற்ற உழவனுக்கு இல்லாவிட்டாலும் குத்தகைதாரரான விவசாயிக்கு வழங்க முற்பட்ட இந்த மசோதா, அந்தக் காலக்கட்டத்தில் புரட்சிகரமானதாய்க் கருதப்பட்டது. இம்மசோதாவுக்கு பிரிட்டிஷ் மேலாதிக்கத்தின் அங்கிகாரம் கிடைப்பது மிகக் கடினம் என்று அமைச்சரவைக்குத் தெரிவிக்கப்பட்டது. இதன் காரணமாய் பிரிட்டிஷ் மேலாதிக்கத்



• பிரகாசம்.

துக்கும் காங்கிரஸுக்கும் இடையே ஒரு போராட்டம் நிகழும் என்றும் எல்லாரும் எதிர்பார்த்தார்கள். அதன் முடிவு என்னவாய் இருக்கும் என்று அவரவரும் ஊகிக்க ஆரம்பித்தார்கள். ஆனால் அந்தப் போராட்டத்துக்கு இடமே இல்லாமல் போய்விட்டது. ஐரோப்பாவில் உலக யுத்தம் மூளவும் மந்திரி சபையே ராஜினாமா செய்ய வேண்டிய சூழ்நிலை உருவாகிவிட்டது.

* * * * *

கோட்டையிலும் சட்டசபையிலும் மட்டுமே ஸி. ஆர். தம் நேரத்தையெல்லாம் கழித்துவிடவில்லை. மாலை நேரங்களில் சமீப காலத்தில் நண்பராகியிருந்தவரும் இலக்கிய விமர்சகரும், கம்பனைக் கருத்தூன்றிப் படித்தவருமான டி. கே. சிதம்பரநாத முதலியார் (டி. கே. சி.) வீட்டுக்குச் சென்று கம்பராமாயணத்தை ரசிப்பார்; தமிழ் மொழியை அலசுவார். அல்லது பொதுக் கூட்டங்களுக்குச் சென்று எந்த விஷயம் பற்றி வேணுமானாலும் சுவையாகப் பேசுவார்.

அயல் விவகார அமைச்சரும், வைஸ்ராயும்தான் பிரிட்டிஷ் இந்திய சாம்ராஜ்யத்தின் பிரதம காவலர்கள். இருவருமே ஸ்காட்லாந்தைச் சேர்ந்தவர்கள். சென்னை காலிடோனியன் (ஸ்காட்டிஷ்) சங்கம் நடத்திய புனித ஆன்ட்ரூ விருந்தில் கலந்து கொள்ள ஸி. ஆர். ஒப்புதல் அளித்திருக்கிறார் என்று இவர்களுக்குத் தெரிய வந்தபோது இருவருக்குமே சிரிப்புத் தாங்கவில்லையாம். காரணம், இத்தகைய விருந்துகளில் மதுபானம் தாராளமாய் வழங்கப்படும் என்பதுதான். லின்லித்கோவின் சொற்களில் கூறுவதெனில் "சாதாரணமாகத் தெளிந்த புத்தியோடு அங்கு யாரும் இருக்க மாட்டார்கள். மதுவிலக்கைத்தீவிரமாக ஆதரிக்கும்ஸி.ஆர். இத்தகைய ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்ள முன் வந்தது அந்நிகழ்ச்சிக்கு ஒரு சரித்திர முக்கியத்துவத்தை அளித்து விட்டது!''

நல்லகாலமாக மேதகுபிரபுக்கள் அஞ்சிய விதமாய் ஏதும் நடந்து விடவில்லை. காலிடோனியர்கள் கடைசி வரை புத்தித் தெளிவோடு இருந்தனர். நிகழ்ச்சிக்கு யாரேனும் கலகலப்பூட்டினார் எனில் அது பிரதம மந்திரிதான்! "ஆங்கிலேயரைத்தாக்கியும்ஸ்காட்டிஷ் காரரைப் புகழ்ந்தும் இங்கு பேசப்பட்டதைக் கேட்டு ஓரளவு மகிழ்ந்தேன். உங்களுக்குள் மோதல்கள் இருக்கின்றன என்று கற்பனையாவது செய்து பார்ப்பதில் ஒரு இன்பம் இருக்கிறது. (சிரிப்பு) ஆனால் அதை நம்புவதற்கு நான் முட்டாள் இல்லை. நீங்கள் எல்லோரும் ஒரே இனம் — இதெல்லாம் ஒரு விளையாட்டுதான் என்பது எனக்குத் தெரியும். உங்கள் சிறிய தீவுக்குள் ஒற்றுமையைக் குலைத்துக் கொண்டு சண்டையிடும் தவறை நீங்கள் செய்ய மாட்டீர்கள். இந்தச் சின்னத்தனத்துக்கு உங்கள் பெருந்தன்மை இடம் தராது.'' (கரகோஷம்).

ஸி. ஆர். மேலும் சொன்னார்:

''இங்கு பயங்கரமான மாறுதல்கள் (உங்கள் நோக்கில்) ஏற்பட்டுள்ள போதிலும், மேன்மேலும் இத்தகைய மாற்றங்கள் ஏற்படும் என்று தீர்மானமாக நீங்கள் அறிந்திருந்த போதிலும் தொடர்ந்து எங்களுக்காகப் பணியாற்றி வருகிறீர்கள். பிரதமர் என்ற முறையில் எனக்கு உங்களுடைய அரசு ஊழியத்தில் எந்தவிதமான குறையும் கிடையாது.

''நீங்கள் இந்நாட்டுக்கு உங்கள் திறமைக்கேற்ற அளவில் சேவை செய்ய விரும்பவில்லை என்றெல்லாம் நான் பாசாங்கு செய்ய மாட்டேன். சில சமயங்களில் சேவை செய்ய வேண்டும் என்ற உங்கள் விருப்பத்துக்குப் போட்டியாய் நாங்கள் கிளம்பி விடுகிறோம். இந்நாட்டுக்குச் சேவை செய்யும் பாக்கியத்தை எங்களுக்கே முழுதும் விட்டுக் கொடுத்து விட வேண்டும் என்று உங்களுடன் சண்டை பிடிக்கிறோம். அதற்குக் காரணம் தேச சேவையில் கிடைக்கும் இன்பத்தை நாங்கள் முழுமையாகத் துய்க்க விரும்புவதுதான்.''

* * * * *

1938 ஜனவரியில், ''நாடெங்கும் உள்ள பல்லாயிரக்கணக்கான காங்கிரஸ் கமிட்டிகளும், அரசுப் பணியாற்றும் ஹிந்து அதிகாரிகளும், ஹிந்து ராஜ்யம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளதாகவே கருதி செயல்பட்டு வருகின்றனர்'' என்று ஜின்னா குற்றம் சாட்டினார். காங்கிரஸ்காரர்கள் இது மிக அநியாயமான குற்றச்சாட்டு என்று கருதினர். ஆனால் ஏராளமான முஸ்லிம்கள் ஜின்னாவின் கூற்றை ஒப்புக் கொண்டனர். ராஜதானியில் ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையை வளர்க்க ஸி. ஆர். இடைவிடாமல் முயன்ற போதிலும் முஸ்லிம் சிறுபான்மையினரில் ஒரு கணிசமான பகுதியினர் காங்கிரஸிலிருந்து தங்களை வேறுபடுத்திக் கொண்டனர்.

(தொடரும்)

தமிழாக்கம்: சீதா ரவி



''ஜோக் எழுத்தாளர்களிலேயே சிறப்பு வாய்ந்தவர் இவர்தான்.

''அப்படியா...?''

''ஆமாம்... எங்கே திருடி எழுதுறார்ங்கிறதையே கண்டுபிடிக்க முடியாது...!''

—கிணத்துக்கடவு ரவி.

# மௌனப் புயல்

**12**

"தலையைப் போர்த்திக் கொள்ளணும் மகளே!"

ரஞ்சனி திரும்பிப் பார்த்தாள். பொற்கோவிலின் பிரதான வாயிலை ஒட்டியிருந்த பூக்கடைக்காரக் கிழவன் அவளைப் பார்த்து மெலிதாகப் புன்னகை புரிந்தான்.

அவள் தலைப்பால் தலையைப் போர்த்திக் கொண்டாள். அவளுடன் வந்திருந்த மற்றப் பத்திரிகையாளர்கள் தங்கள் கைக்குட்டையினால் தலையை மறைத்துக் கட்டியிருந்தார்கள். அவளைப் பார்த்துச் சிநேகிதமாகச் சிரித்தார்கள்.

வாயிலுக்குள் நுழைவதற்குமுன் கால்களைக் கழுவச் செயற்கை நீர் ஓடையும் கை கழுவிக் கொள்ள வாஷ் பேஸினும் இருப்பதை அவள் கவனித்தாள்.

அவள் கை கழுவும்போது கிழவன் தனது பஞ்சாபி கலந்த ஹிந்தியில் பேசிக் கொண்டு போனான்.

"இப்பொழுது பக்தர்கள் யாரும் இங்கு வருவதில்லை. வருபவர்கள் எல்லாம் தமாஷ் பார்க்க வருபவர்கள்! போ; நீயும் போய் எண்ணு. ராணுவம் போட்டிருக்கும் துப்பாக்கித் துளைகளை! அகால் தக்த்துக்கு நேர்ந்திருக்கும் கதியைப் போய்ப் பார்!"

'நீ வரல்லியா?' என்று ஒரு பத்திரிகைக்காரர் சமிக்ஞை செய்ததும் அவள் ஓடையில் பாதங்களைக் கழுவிக் கும்பலோடு கலந்து கொண்டாள்.

உள்ளே கால் வைத்ததும் பொற்கோவிலின் கலசங்களும் கோவிலைச் சுற்றிய தடாகமும் பளீரென்று வெயிலில் தகதகத்தது. எங்களுக்கு ஏதும் ஆபத்தில்லை என்கிற மாதிரி.

ஒரு அரசாங்க அதிகாரியும் ராணுவ அதிகாரியும் கூடவே வந்து ராணுவம் எந்த வழியாக நுழைந்தது, பகைவனினால் எத்தனை சேதம் ஆயிற்று. ஹர்மந்திர் ஸாஹப் காப்பாற்றப்பட வேண்டும் என்று ராணுவம் எத்தனை கட்டுப்பாட்டுடன் இருந்தது என்று விவரித்துக் கொண்டு வந்தார்கள்.

அந்தவிவரங்களையெல்லாம்செய்தி அறிக்கைகளும் டி. வி. யும் ஏற்கெனவே கொடுத்து விட்டதால் அவள் அதில் அவ்வளவு கவனம் செலுத்தாமல் பார்வையைச் சுழற்றினாள்.

அவள் எதிர்பார்த்திருந்த அளவு ராணுவத் தலைகள் தெரியவில்லை. பழுது வேலை பார்க்க வந்திருந்த ஆட்கள் அதிகம் இருந்தார்கள். பூக்கடைக்காரக் கிழவன் சொன்னது போல் சீக்கியர்கள் கூட வேடிக்கை பார்க்க வந்தவர்களாகத்தான் தெரிந்தார்கள். பழுதான இடங்களையும் குண்டுபட்ட இடங்களையும் தீவிரமாகப் பார்த்துக் கொண்டு, தங்களுக்குள் காரமாகப் பேசிக் கொண்டு.

பரிக்கிரமாவின் சில சலவைக்கல் ஸ்லாபுகள் புதிதாகப் போடப்பட்டிருந்தது தெரிந்தது.

இடப்பக்கம் இருந்த வாசக சாலை தீக்கு இரையானதன் விளைவாகக் கரிந்து காணப்பட்டது. வலப்பக்கம் பார்வையைத் திருப்பியதும் சட்டென்று கண்ணில் தென்பட்டது அகால்தக்த் — போரில் வீழ்ந்த பரிதாபத் தோடு. அதற்கு முன்னால் ஒரு சீக்கியக் கும்பல் நின்றிருந்தது, விதிர்த்த பார்வையோடு — அதில் தெரிந்த துயரத்தையும் கோபத்தையும் கிட்டத்தில் கவனித்த போது பொது ஜனங்களை இவ்வளவு சீக்கிரம் தரிசனத்துக்கு அனுமதித்தது நல்லதுதானா என்று ரஞ்சனிக்குச் சந்தேகம் வந்தது.

"இவர்களுடைய கோபத்தைப் பார்த்தால் எனக்குப் பயமாயிருக்கு" என்றாள் அவள் தன் அருகில் இருந்த பத்திரிகையாளர் பாட்டியாவிடம்.

பாட்டியா சிநேகிதமாக அவள் தோளை அணைத்தபடி நடந்தார்.

"பிந்திரன்வாலே வைத்திருந்த ஆயுதங்களை இப்போது காட்டப் போகிறார்கள். இன்னும் அதிகமாகப் பயந்து போவாய் பார்!"

மேஜர் ஜெனரல் பிரார் அவர்களை அழைத்துக் கொண்டு போய் அகால்தக்த் அடித்தளத்தில் கண்டெடுத்திருந்த ஆயுதங்களைக் காட்டிய போது "ஓ மை காட்!" என்றாள் அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல்.

பிரார் நீள ஒவ்வொன்றையும் விவரித்துக் கொண்டு போனார். அவர் சொன்னது எதுவும் அவளுக்குக் கிரகிக்கவில்லை. அவர் மிகவும் உணர்ச்சிவசப்பட்டிருந்ததுதான் தெரிந்தது. உள்மனத்துத் துயரம் கண்களில் எட்டிப் பார்த்தது.

அவர்கள் மீண்டும் பரிக்ரமாவுக்குத் திரும்பியதும் அவள் பாட்டியாவிடம், "என்னால் நம்ப முடியவில்லை" என்றாள்.



வாஸந்தி

''எதை?'' என்றார் பாட்டியா மென்னகை யுடன். ''இத்தனை ஆயுதம் எப்படி அவன் சேகரித்தான் என்பதையா?''

''இல்லே, அவன் அத்தனை சேர்க்கிறவரை மாநில அரசு என்ன செய்து கொண்டிருந்தது?''

பாட்டியா லேசாகச் சிரித்தார். ''நீ ரொம்பச் சின்னவள். இப்பத்தான் ஜர்னலிஸத்தில் புகுந்திருக்கே. நான் முப்பது வருஷமா இதில் இருக்கேன். எனக்கு இப்ப இந்த மாதிரி கேள்விகள் அதிர்ச்சியை ஏற்படுத்தறதில்லே.ஏன்னா அவைகளுக்குப்பதில்இல்லே. அதுதான் அரசியல்!''

''எத்தனை கேவலம்?''

''கேவலம் மட்டுமில்லே, துக்ககரமான விஷயம். கடைசியிலே எப்படிப்பட்ட முடிவை எடுக்கும்படி ஆயிற்று பார்! இடிந்துவிட்ட அகால்தக்தைத் திருப்பிக் கட்டுவது அரசுக்கு ஒன்றும் கஷ்டமில்லே. ஆனால் சீக்குக்கும் ஹிந்துவுக்கும் இனிமேல் பாலம் கட்டுவது முடியாத காரியம்!''

பாட்டியா மெல்லிய துயரத்துடன் எதிரில் தெரிந்த இடிபாட்டைப் பார்த்தார். இவர் க்ஷவரம் செய்து கொண்ட மோனா சீக்கோ என்று அவளுக்குச் சந்தேகம் வந்தது.

''ராணுவப் பிரவேசத்தினால் பிரச்னை தீரவில்லே,'' என்றார் அவர் மெல்லிய குரலில்.

''நீங்கள் சீக்கியரா?''

அவர் சட்டென்று அவளைப்பார்த்து மென்மையாகச் சிரித்தார்.

''இல்லே, சீக் — இந்து வித்தியாசம் தெரியாமல் வளர்ந்த பஞ்சாபி ஹிந்து. பிரிவினையினால் ஏற்பட்ட கஷ்டங்கள் எங்களுக்குப் பொதுவானது.இரண்டு இனங்களும்சேர்ந்து பஞ்சாபைச் சுபிட்சமாக்க முப்பது வருஷங்கள் ஆயிற்று. நிலைமையைத் தலைகீழாக்க மூன்று வருஷங்கள் கூட வெறியர்கள் எடுத்துக்கொள்ளவில்லே.மீண்டும்பிரிவினை வந்துவிட்டால் என்ன செய்வது என்கிற பயம் தான் எல்லாப் பஞ்சாபிகளுக்கும் இப்பொழுது.''

''பிரிவினை வருமா?''

அவர் தோளைக் குலுக்கினார்.

''வரக்கூடாது என்று பிரார்த்திப்போம்.'' அவரது குரலிலிருந்த ஆதங்கம் அவளது அடிவயிற்றில் சங்கடமேற்படுத்திற்று.

காரசாரமாகத் தங்களுக்குள் விவாதித்துக் கொண்டு நின்றிருந்த ஒரு சீக்கிய ஆண் பெண் கும்பலைச் சற்றுத் தொலைவில் பார்த்து அவன் மெல்லிய குரலில் சொன்னான்.

''இவர்கள் ஆனாலும் இந்தக் கோவிலைப் பற்றி ஸென்ஸிடிவ்வாக இருக்கிறார்கள்.''

பாட்டியா மீண்டும் சிரித்தார். ''புதிய மதத்துக்கு ரோஷம் அதிகம். நம்மை யாராவது அசைக்க முடியுமா பார்! சரித்திர காலமாய் எத்தனை அவமானங்களைச் சுமந்திருக்கிறோம் மௌனமாக! அந்த மௌனமே நமது பலத்தின் விளக்கம்! மெஜாரிட்டியின் பலம் மட்டுமில்லே, வேர்களின் பலம்!''

''நீங்கள் எல்லோரும் பத்திரிகைக்காரர்களா?''

ரஞ்சனி திடுக்கிட்டு நிமிர்ந்தாள்.

ஒருசீக்கியப்பெண்நின்றிருந்தாள்வெட்டுகிற பார்வையுடன்.

''யாரம்மா நீ?''

''ஒரு தன்மானமுள்ள சீக்!'' என்றாள் அவள் நாடக பாணியில்.

இங்கே ராணுவம் செய்திருக்கிற அக்கிரமத்தைப் பற்றி எழுதுங்கள்! அகால்தக்தை மண்ணோடு மண்ணாக்கி விட்டார்கள். அந்தக் கட்டிடத்தைப் பார்த்தீர்களா? எப்படி எரித்து விட்டார்கள்! எங்கள் குருமார்களின் கையெழுத்துப் பிரதிகள் அவ்வளவையும் வேண்டுமென்றே அழித்துவிட்டார்கள்!''

அவள் மகாக் கோபத்துடன், ஹிந்தியில் சரளமாகத் தொடர முடியாமல் பஞ்சாபியில் கத்திக் கொண்டே அவர்களுடன் நடந்தாள்.

யாருமே அவளைத் தடுக்க முயலாதது ரஞ்சனிக்கு வேடிக்கையாக இருந்தது. அங்கங்கே தெரிந்த ராணுவ வீரர்கள் இது தினம் நடக்கும்சம்பவம்போல்பார்வையைவேறெங்கோ திருப்பிக் கொண்டார்கள். சில சீக்கியர்கள்



அவனுடன் சேர்ந்து ஒத்து ஊதிக் கொண்டு வந்தார்கள்.

"சீக்கிய சரித்திரத்தை *தில்லி சிம்மாஸனத்துக்கு எடுத்துச் சொல்லுங்கள்! இந்தக் கோவிலைத் தாக்கியவர்களை நாங்கள் சும்மா விட்டதில்லை! வெள்ளைக்காரனுகட்டும் மொகலாயனுகட்டும், பழிக்குப் பழி வாங்காமல் விட்டதில்லை. இப்பொழுது தில்லியில் அரசு புரியும் பிராம்மணர்களை** சும்மா விடுவோமா?"

இரண்டு ராணுவ வீரர்கள் நிதானமாக அவளை நோக்கி நடக்க ஆரம்பித்ததும் அவள் அதை உணர்ந்து வெகு வேகமாக ஓடிக் கும்பலில் மறைந்து விட்டாள்:

அங்கிருந்த சில சீக்கியர்கள் சிப்பாய்களைப் பார்த்துப் பரிகாசமாகச் சிரித்தார்கள்.

திடீரென்று ஒலிபெருக்கியில் கோஷங்கள் கேட்டன.

"அமர்ஷஹீத் பிந்திரன்வாலே ஜிந்தாபாத்! காலிஸ்தான் ஜிந்தாபாத்!"

இளைஞர்களின் குரல்கள். ஒரு நிமிஷம் தொடர்ந்து கேட்டு நின்றன.

ரஞ்சனி கலவரத்துடன் பாட்டியாவைப் பார்த்தாள்.

அவர் முகத்தில் யோசனையும் கவலையும் தெரிந்தது. பத்திரிகைக்காரர்களின் முகங்களில் ஒட்டுமொத்தமாய்க் கவலை தெரிந்தது.

"இத்தனை சீக்கிரம் பொது ஜனங்களை உள்ளே அனுப்பியது தப்பு என்று நான் அப்பவே நினைத்தேன்!" என்றுள் அவள் மெல்லிய குரலில்.

"இல்லை" என்பது போல் பாட்டியா தலையசைத்தார். "ஆனால் இனிமேல் அரசு என்ன செய்தாலும் அது இங்கு தவருகப் போகும்..."

---

* பிந்திரன்வாலேயும் பொதுவாகத் தீவிரவாத சீக்கியர்களும் மத்திய அரசை டில்லி தர்பார், தில்லி சிம்மாஸனம் என்று குறிப்பிடுவது வழக்கம்.

** காஷ்மீர பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்த இந்திரா காந்தியின் ஆட்சி என்கிற கருத்து.



"செத்தவனுடைய ஆவி இவர்களை இனிமேல் ஆட்டி வைக்கப் போகிறது!"

"ஆரம்பித்து விட்டது! அந்தப் பைத்தியக்காரப் பெண் என்ன சொன்னாள் பார்த்தியா? ஜனநாயக அரசுக்கும் சர்வாதிகார அரசுக்கும் அவளுக்கு வித்தியாசம் தெரியவில்லை. வெள்ளைக்கார முகலாய அரசுகளோடு இதை ஒப்பிடுகிறாள்!"

"அதுதான் சிக் சைக்கி!"

பாட்டியா வாயே திறக்கவில்லை. ரஞ்சனி ஓர் அதிர்ச்சி கலந்த மௌனத்துடன் அவரோடு நடந்தாள். வெளியில் வந்து பூக்கடையைத் தாண்டும் போது கிழவன் சிநேகிதமாகக் கேட்டான். "கோவிலைப் பார்த்தியா பேட்டீ (மகளே)?"

"பார்த்தேன்" என்றாள் அவள் மெல்லிய குரலில்.

"துக்கமாக இருக்கிறதில்லையா அதனுடைய இப்போதைய நிலைமையைக் கண்டு?"

"துக்கப்பட வேண்டிய விஷயம் இங்கே நிறைய இருக்கு தாதா!" என்றாள் அவள் ஜாக்கிரதையாக.

"பிந்திரன்வாலேயைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

கிழவன் அவளைத் தீர்க்கமாகப் பார்த்தான்.

"அவர் ஒரு ரிஷி! ஒரு மகான் பேட்டீ! இந்தக் கோவிலைக் காப்பதற்காக உயிரை விட்டவர். அமர் ஷஹீத்!"

அவளுக்குத் திடீரென்று மன்மோஹன் ஸிங்கின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. இவர்களைப் பற்றிய அவனது கணிப்பு எத்தனை சரியானது!

கிழவனின் சிவந்த முகத்தில் ஒரு தீவிரம் பளபளத்தது.

"எங்களுக்கு ரொம்பப் பெரிய அவமானம் ஏற்பட்டு விட்டது பேட்டீ. நாங்கள் சும்மா இருக்க மாட்டோம். இதை உன் பேப்பரில் எழுது!"

பாட்டியா செருப்பை மாட்டிக் கொண்டு வந்து.

"நீ கிளம்பவில்லையா?" என்றார் ஆங்கிலத்தில்.

"இவர்களோடு பேசப் பேச உன் கலவரம் அதிகமாகும்!"

பூக்காரக் கிழவன் அடங்குவதாக இல்லை.

"எங்களை வேண்டுமென்றே அவமானப் படுத்துகிறார்கள். சீக்கியர்களைத் தவிர வேறு யாரும் இந்தக் கோவிலைக் கட்டக் கூடாது! கண்டவர்களைக் கூப்பிட்டுக் கூலி கொடுத்துக் கட்ட வைக்கிறார்கள். டி.வி. சினிமாப்படம் எடுப்பதற்காக நாலைந்து உதவாக்கரை சீக்கியர்களை பயமுறுத்தி 'கார்சேவா' செய்வதாகப் படம் எடுக்கிறார்கள் உலகத்தை ஏமாற்ற!"

படித்தவர்களாய்த் தோற்றமளித்த அங்கு நின்றிருந்த சில சீக்கியர்கள் ஒரு இறுக்கமான மௌனத்துடன் பார்வையை எங்கேயோ பதித்திருந்தார்கள்.

"செருப்பைப் போட்டுக் கொண்டு வா ரஞ்சனி" என்றார் பாட்டியா கண்டிப்புடன்.

செருப்புக்களை வைத்திருந்த இடத்துக்கு ரஞ்சனி விரைந்தாள். அவள் திரும்பி மற்றவர்களுடன் சேர்ந்து கொண்ட போது கடிகார டவர் வாசலில் மன்மோஹன் ஸிங் நின்றிருந்தான் தன் நண்பன் ஒருத்தனுடன்.

"ஹாய்!" என்றாள் அவள் மகிழ்ச்சியுடன். "எப்ப வந்தே?"

"நேத்து இரவு பஸ்ஸிலே!" என்று மன்மோஹன் புன்னகை செய்தான்.

"உன்னுடைய ப்ரோக்ராம் என்ன? என்னோடு வறியா?"

"சாயங்கால ஃப்ளைட்லே தில்லி திரும்பறோம். இப்ப ஹோட்டலுக்குத்தான் போறோம்!"

"அப்ப வாயேன்!" என்றாள் அவள் ஆர்வத்தோடு.

"சொல்லிட்டு வரேன்!" என்று அவள் பாட்டியாவிடம் சென்று விஷயத்தைச் சொன்னாள். அவள் காட்டிய திசையைப் பார்த்து,

"யார், அந்தச் சீக்கியப் பையனோடா?" என்றார் அவர் சந்தேகத்துடன்.

"ஆமாம்."

"தெரியாத சீக்கியனோடு நீ போகக் கூடாது! அது நல்லதில்லே!"

"அவன் என்னுடைய நண்பன். தில்லியில் யூனிவர்ஸிடியில் லெக்சரர்" என்றாள் அவள் சிரித்துக் கொண்டு.

அவர் கண்களில் சந்தேகம் இன்னும் தெளியவில்லை.

"நான் உன்னை நம்பறேன். ஆனால் எங்கே உன்னை அழைத்துக் கொண்டு போகிறாங்க என்று தெரியணும். விலாசத்தைக் கொடுக்கச் சொல்லு. இரண்டு மணி நேரத்திலே நீ ஹோட்டலுக்குத் திரும்பல்லியானா ராணுவத்தை அனுப்பி விடுவோம் உன்னைத் தேட!"

அவள் சிரித்துக் கொண்டே மன்மோஹன் ஸிங்கிடம் இதைச் சொன்ன போது அவன் முகத்தில் சிரிப்பு மலரவில்லை. இருந்த பிரசன்னமும் போய்க் கருமை படர்ந்தது.

(தொடரும்)

புதிதாக ஒரு 'ஷூ'. இதன் பின் பக்கத்தில் ஒரு 'மினி' கம்ப்யூட்டர். அணிந்து கொண்டு ஓடினால், எவ்வளவு தூரம் ஓடியிருக்கிறோம், எவ்வளவு வேகத்தில் ஓடினோம், அதற்கு எவ்வளவு 'கலோரி' சக்தி செலவாயிற்று என்பதை இந்த மினி கம்ப்யூட்டர் பதிவு செய்து கொள்கிறது.

— சம்பத்குமாரி

ஆதாரம்: லொஸைட்டி.







# இரவல் கொடுத்தலை நிறுத்துவோமா?

ஆர். வரதராஜன்

"தியேட்டருக்குப் போனப்புறம் தான் மாமிக்கு பர்ஸ் எடுத்துண்டு வரலேன்னு தெரிஞ்சுது. வீட்டுக்குப் போறேன்னு கிளம்பிஞ. மாமியைப் பார்க்கவே பரிதாபமா இருந்தது. நான் பணம் போட்டுக்கறேன்னு சொன்னேன்."

பக்கத்து வீட்டில் லாரி நின்று கொண்டிருந்தது. அதிலிருந்து சாமான்களை இறக்கிக் கொண்டிருந்தார்கள்.

"புதிதாகக் குடி வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது" என்று எண்ணிக் கொண்டு ஷேவ் செய்யு உட்கார்ந்தேன்.

திடீரென்று பாலு வேகமாக ஓடி வந்தான்.

"அப்பா பக்கத்து வீட்டு மாமா பேப்பர் கேட்கிறார்."

"நானே படிக்கலேடா இன்னும்."

அதற்குள் புதிதாகக் குடி வந்திருக்கிற செய்தி சமையலறைக்கு எட்டி ஸ்தலத்துக்கு உடனே விரைந்து வந்தாள் என் மனைவி.

"என்ன வேணுமாம்?"

"பேப்பர்ம்மா. அவர்கள் வீட்டிலே கேட்கிறு."

"குடுங்களேன். தினமும் பேப்பர் படிக்கலேன்னு தலை வெடிச்சுடுமா உங்களுக்கு?"

"அவாதான் கடையிலே வாங்கிக்கட்டுமே," என்று பதிலுக்கு இரைந்தேன்.

"புதிசா வந்திருக்கா. கடை எங்கேயிருக்குன்னு தெரியுமோ என்னவோ."

பேப்பரைப் பாலுவின் கையில் கொடுத்தனுப்பிவிட்டுச் சமையலறைக்குள் சென்றுள் என் பிரிய பத்னி சரோஜா.

நான் கோபத்துடன் அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"அடுத்த வீட்டிலே தண்ணீர் இழுக்கக் கயிறு இல்லேன்னு நம்ம வீட்டுக் கயித்தைக் குடுத்திருக்கேன். அப்புறம் சொல்லலேன்னு குதிக்காதேள்."

"எதையோ பண்ணு." அவள் சொன்னதை நான் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. ஆபீஸ் கிளம்பும் அவசரம் எனக்கு. குளிப்பதற்காகத் துண்டை எடுத்துக் கொண்டு பின்புறம் சென்றேன்.

குடத்தைக் கிணற்றில் இறக்க நினைத்த போதுதான் அங்கு கயிறு இல்லாதது தெரிந்தது.

"எங்கேடி கயிறு?" கத்தினேன்.

"அடுத்த வீட்டிலே குடுத்திருக்கேன்னு சொன்னேனே," சமையலறையிலிருந்து பதில் வந்தது.

"அங்கே குடுத்துட்டா இப்ப என்னடி பண்றது?"

என் இரைச்சலைக் கேட்டு சரோஜாவே கிணற்றடிக்கு வந்தாள்.

திடீரென்று என் கழுத்தில் சுருக்காகக் கயிறு வந்து விழுந்தது!

கோபத்துடன் திரும்பினேன்.

காம்பவுண்டுச் சுவருக்குமேல் உயரமாய் ஒருவன் கோபமாகப் போவது தெரிந்தது.

சட்டென்று அடுத்த வீட்டு மாமியின் முகம் சுவருக்குமேல் தோன்றியது.

"கோவிச்சுக்காதீங்கோ சார்! இரவல் வாங்கறதுன்னு எங்க வீட்டுப் பையனுக்குப் பிடிக்காது. அதான் வீசிட்டுப் போறான்."

நான் பல்லை நறநறத்தேன்.

என் மனைவி இடையில் புகுந்து சமாளித்தாள்.

* * * * *

அன்று சாப்பிடாமலேயே ஆபீஸுக்குக் கிளம்பிவிட்டேன்.

மாலையில் வீடு திரும்பினேன். வீட்டில் அசாதாரண அமைதி நிலவியது.

பாலு பக்கத்து வீட்டுப் பொடியனுடன் கேரம் விளையாடிக் கொண்டிருந்தான்.

"எங்கேடா அம்மா?" என்றேன்.

"அடுத்த வீட்டு மாமியோட சினிமாவுக்குப் போயிருக்காப்பா."

நான் களைப்புடன் சோபாவில் சரிந்தேன்.

வாசலில் செருப்புச் சத்தம் கேட்டது.

என் மனைவிதான்!

அவளைப் பார்த்ததும் அசந்து போனேன். கல்யாணமாகி இத்தனை வருடங்களில் ஒரு நாள் கூட அவள் இன்று மாதிரி அலங்காரம் செய்து கொண்டதில்லை.

"என்ன பார்க்கறேள்?" பெருமையாகக் கேட்டபடி அருகில் வந்து உட்கார்ந்தாள்.

"சினிமாவா?" என்றேன்.

"ஆமாம், மாமி கர்ணன் படம் பார்க்கவேயில்லேன்னா. படமும் இன்னியோட எடுக்கப் போறாளாம். தியேட்டருக்குப் போனப்புறம் தான் மாமிக்கு பர்ஸ் எடுத்துண்டு வர லேன்னு தெரிஞ்சது. வீட்டுக்குப் போறேன்னு கிளம்பினா. மாமியைப் பார்க்கவே பரிதாபமா இருந்தது. நான் பணம் கொடுக்கறேன்னு சொன்னேன்."



"இந்தப் புடவையையே எடுத்துக்குங்கம்மா. இதுக்கு மேட்சா ஜாக்கெட்டும் ஹெல் மெட்டும் நம்ம கடையிலேயே இருக்கு!"

— பவித்ரா.

நடுவில் இடைமறித்தேன்.

"உங்களைப் பார்த்தா மகாலட்சுமி மாதிரி இருக்குன்னு சொல்லியிருப்பாளே!"

"அட! உங்களுக்குக் கூட புத்திசாலித்தனம் இருக்கே," என் அறிவை வியந்துவிட்டு எழுந்தாள்.

"சாப்பிட டிபன் பண்ணியிருக்கியா?"

"இப்பத்தானே சினிமாலேர்ந்து வர்றேன்? எப்படிப் பண்ண முடியும்?"

"சரி வாடா பாலு! ஹோட்டல்லே டிபன் சாப்பிடப் போகலாம்."

மகனை அழைத்துக் கொண்டு கிளம்பினேன்.

"கணேஷையும் அழைச்சுண்டு போங்கோ. மாமியும் என் கூடத்தானே சினிமாவுக்கு வந்தா. அவாத்திலேயும் டிபன் பண்ணியிருக்க மாட்டா." — என்றாள் கரிசனமாக.

நான் கிளம்பிய பாலுவைத் திரும்பவும் விளையாடச் சொல்லிவிட்டுத் தண்ணீர் குடிக்க உள்ளே போனேன்.

இரவு சாதம் போடும்போது சரோஜா இமைரென்று நினைத்துக் கொண்டு சொன்னாள்.

"ஏன்னா! நம்ப வீட்லேயே எல்லாம் இரவல் வாங்கிக்கறாளே, திருப்பித் தருவாளோ?"

"யாரைச் சொல்றே?"

"அடுத்தவீட்டுக்காராளைத்தான்." அழுது விடுவாள் போலிருந்தது.

நான் மனத்திற்குள் மகிழ்ந்து போனேன். "நீ இனிமேல் அவர்களுக்கு ஒன்றும் தராதே," என்றேன்.

படுப்பதற்குப் படுக்கை போட்டாகி விட்டது.

வாசல் கதவு தட்டும் சப்தம் கேட்டது.

திறந்தேன். கணேஷ் கையில் பாத்திரத்தோடு நேராக என் மனைவியிடம் போய், "அம்மா குடுத்தா," என்றான்.

"என்னடா இது?" என்றாள்.

"உப்புமா."

சரோஜா என்னைப் பார்த்துச் சிரித்தாள். "அவாளும் நமக்குத் தர்றா." என்ற அர்த்தம் அதில் தொனித்தது.

கணேஷ் வாசல் அருகே சென்றவன் சொன்னான்: "நேத்து ராத்திரி ஊர்லேர்ந்து வரச்சே வழியிலே பசிக்குமேன்னு பண்ணது. அதை வீணாக்க வேண்டாம்னு அம்மா உங்ககிட்டே குடுத்தா. உங்களுக்குப் பிடிக்கலேன்னா மாட்டுக்குப் போட்டுடுங்கோ."

போய் விட்டான்.

நான் என் மனைவி முகத்தில் அசடு வழிவதைப் பார்த்து அடக்க முடியாமல் சிரிக்க ஆரம்பித்தேன்.

ஆர். வரதராஜன்,
I. C.W.A. I. மாணவன்,
ஸ்ரீரங்கம்,
திருச்சி — 620 006.

# மோகினித் திருக்கோலம்

37

## பார்லிமெண்ட் தெரியுமா, தம்பி!

வேன்ஸானை அங்கே பார்த்தது ஆச்சரியமாக இருந்தது வர்மனுக்கு. பார்க்கும் இடமெல்லாம் வந்து விடுகிறாரே! இவர் எப்படிப் பட்டவர்! இவர் நோக்கம் என்ன?

வர்மன் அவரை நோக்கி நடந்தான். அவர் குதிரையை விட்டுக் கீழிறங்கி முகத்தைத் துடைத்திருந்தார்.

வர்மனை நோக்கி மெல்லிய புன்னகை காட்டினார். இருப்பினும், முகமும் விழியும் களைத்திருப்பது நன்கு தெரிந்தது.

''வாருங்கள் போகலாம்! இங்கே ரொம்ப தாமதமாகி விட்டது. சம்பவம் ஒன்று நிகழ்ந்தது'' என்றான் வர்மன்.

''எல்லாவற்றையுமே நான் பார்த்தேன்'' என்றார் வேன்ஸான்.

''எப்போது பார்த்தீர்கள்?'' என்றான் வர்மன்.

''சற்று முன்னால்தான்! இங்கே நான் ஒளிந்திருந்தேன். ஏற்கெனவே மராட்டியரைப் பார்த்துவிட்டேன். உனக்கு எச்சரிக்கை கொடுப்பதற்காக காத்திருந்தேன்!'' என்றார் வேன்ஸான்.

வர்மன் ஆச்சரியமுடன் அவரைப் பார்த்தான்.

''எனக்கும் திருப்பதிப் பொருள் மீது அக்கறை இல்லையா?'' என்றார் வேன்ஸான்.

''போகலாமா?'' என்றான் வர்மன் குதிரையைத் திருப்பி.

''நல்லவரிடத்தில் திருப்பதிப் பொருள் போக வேண்டும் என்று எனக்கும் ஆசைதான்.''

வேன்ஸானும் குதிரை ஏறினார்.

''திருப்பதிப்பொருளைப்பற்றித்தான் இருக்கிறது, தம்பி, இந்நாட்டின் எதிர்காலம்!''

வேன்ஸான் குதிரையைச் செலுத்தினார். பல்லக்குகள் மெள்ள எழுந்தன. சிரமப் பரிகாரம் செய்து கொண்ட ஆட்கள் சிலும்பி எழுந்தார்கள்.

''ஓகோ! திருப்பதிப் பொருள் அவ்வளவு முக்கியமா?'' என்றான் வர்மன்.

அவனுக்குச் சிறிதாக வேன்ஸான் மீது சந்தேகம் வந்திருந்தது.

இவர் ஏன் எல்லா இடங்களிலும் தலையைக் காட்டுகிறார்?

குறிப்பாக அவன் போகும் இடங்களில் எல்லாம் வந்துவிடுகிறாரே!

ஏதாவது குறிக்கோள் இருக்குமோ?

மனம் சற்றே குழம்ப, உடன் சிந்துவே அவரை முதன் முதலில் அறிமுகப்படுத்தியது நினைவு வந்தது. சிந்து அப்படித் தவறான மனிதரைச் சிநேகப்படுத்தி விடமாட்டாளே!

''ஆமாம், தம்பி! திருப்பதிப் பொருளைத்தான் சார்ந்திருக்கிறது இந்நாட்டின் எதிர்காலம்!'' என்றார் மீண்டும் வேன்ஸான்.

''ஏன் இப்படிச் சொல்கிறீர்கள் அரசாங்கங்களிடம் பொருள் இல்லையா?''

''எல்லாவற்றையும் செலவழித்து விடுகிறார்கள்! எத்தனை யுத்தத்திற்குத்தான் பணம் பற்றும்! இப்போது எல்லோரும் அன்றாடம் காய்ச்சிகள்!''

''நவாபுகள் கூடவா?''

''ஏன்! அவர்களுக்கு என்ன விதி விலக்கு! இவர்கள் யுத்தம் நடத்திக் கொண்டே இருந்தால்வரிப்பணம்கிடைத்துக்கொண்டே இருக்குமா? இப்போது இரண்டு நவாபுகள் பதவிக்குச் சண்டை போடுகிறார்களே! இரண்டு பேரும் படைச் சிப்பாய்களுக்கே சம்பளம் பாக்கி! எனக்கும் பணம் பாக்கி! இவர்களுக்கு ஏன் யுத்தம்?''

''சரி துரை! வெள்ளைக்காரர்கள் எப்படி?''

''அவர்களும் அன்றாடம் காய்ச்சிகள் தான்! வியாபாரம் மட்டும் செய்து வந்தால் அவர்களிடம் பொருள் இருக்கும். இப்படிச் சண்டை போட ஆரம்பித்தால்...''

''இங்கிலீஷ்காரர்கள் எப்படி?''

''அங்கே திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் தலை கொடுத்திருக்கும் போது இங்கே ஆர்க்காட்டிலும் கொடுத்திருக்கிறார்கள். இரண்டிலும் திண்டாடுகிறார்கள்! சண்டை செய்யப் பணம் கிடையாது. தாய்நாட்டைக் (இங்கிலாந்து) கேட்டால் உதைப்பார்கள்.''

''பிரெஞ்ச்க்காரர்கள் எப்படி?''

''அவர்கள் இங்கிலீஷ்காரர்களை விட மோசம்! இந்த நாட்டின் மண் மீது ஆசை கொண்டு, கிடைக்கும் இடத்தில் எல்லாம் கை வைக்கிறான். அவனுக்கும் பணம் கிடையாது.''

''அப்போது எல்லோருமே தவிக்கிறார்கள், சொல்லுங்கள்!''

''ஆமாம், அதனால்தான் சொன்னேன்! திருப்பதிப் பொருளுக்கு இப்போது பெரும் மகத்துவம். இதுகிடைக்கிறவர்கையில்வெற்றி சரிந்து விடும்.''

''ஓ! அதனால்தான் இந்தப் போட்டி!''

''ஆமாம்!''

**ஸ்ரீவேணுகோபாலன்**

''இப்போது பிரெஞ்சுக்காரருக்குப பொருள் கொண்டு போகிறோமே! அதைப் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

வேன்ஸான் சிறிது கண்ணை மூடினார்.

''உடன்படிக்கைக் குழு விவாதித்த போது நானும் உடன் இருந்தவன்தான். ஆனால் இது எனக்குப் பிடிக்கவில்லை!''

''பிடிக்கவில்லையா! நீங்கள் ஒரு பிரெஞ்சுக் காரர் ஆயிற்றே?''

''நான் இந்நாட்டவன்தான். ஆனால் நடைமுறையில் பிரெஞ்சுக்காரர் ஆனவன். பிரெஞ்சுக்காரியை மணந்திருக்கிறேன்.''

''அப்போது ஏன் நீங்கள்...?'' என்று சொல்லி நிறுத்தினான் வர்மன்.

''தம்பி! சற்று முன் இங்கே ஒரு சம்பவம் நடந்ததே!''

''ஆமாம், சண்டை நடந்தது!''

''அதில் இங்கிலீஷ்காரன் பங்கு கொண்டான் பார்த்தாயா?''

''ஆமாம்! அவர்கள் இல்லாவிட்டால் நாங்கள் அதோகதிதான்.''

''இங்கிலீஷ்காரன் சண்டை போட்டான். மராட்டியரை விரட்டினான். போகும் போது என்ன சொன்னான் பார்த்தாயா? 'இந்த நாட்டில் இப்படி கொள்ளை களவு மலிந்து விட்டதே' என்றான்! நினைவு இருக்கிறதா?''

''ஆமாம் துரை!''

''அவன் ஏன் அப்படிச் சொன்னான் தெரியுமா! அவன் ஒழுங்கு முறைகளைக் கடைப் பிடிப்பவன்!''

''அப்படியா?''

''ஆமாம்! ஒழுங்கு முறையைத் தவறுவதற்குப் பயப்படுபவன். இங்கே அவன் தவறினால், சமயத்தில் அந்தச் செய்தி அவனது தலைநகரம் லண்டன் வரை போய்விடும்.''

''என்ன பெயர் சொன்னீர்கள்?''

''லண்டன்! பிரெஞ்சுக்காரர் அதை 'லாந்த்ர' என்பார்கள்!''

''சரி, அங்கே செய்தி போனால் இவனைக் கண்டிப்பார்களா?''

''ஆமாம்! பார்லெமான் (பார்லிமெண்ட்) இருக்கிறது. ஜனங்களின் பிரதிநிதிகள் அங்கே இருப்பார்கள். அவர்கள் இந்த வெள்ளைக்காரனைப் பார்த்துக் கேட்பார்கள். 'நீ இப்படி இந்தியா போன வேளையில், ஒரு இந்திய கோஷ்டியை கொள்ளை அடிக்க முயன்ற மராட்டியர்களை விரட்டி விட்டு, பிறகு நீயே கொள்ளை அடித்தாயா?' என்று.''

வர்மனின் விழிகள் ''பளீர்'' என்று விரிந்தன.

''துரை! என்ன சொல்கிறீர்கள். ஜனங்களின் பிரதிநிதிகள் கூட இந்த வெள்ளைக்காரனைக் கண்டிப்பார்களா?''

''கண்டிப்பது மட்டுமில்லை. சிறையில் கூடத் தள்ளுவார்கள்!''



''ராஜா இருக்காரா, இல்லையா? அவர் ஒன்றும் சொல்ல மாட்டாரா?''

சிரித்தார் வேன்ஸான்.

''தம்பி! பரம்பரை அறுந்து போகாத ராஜா அங்கே இருக்கிறார். ஆனால் விஷயம் தெரியுமா? அவர் நினைத்தால் ஒருவரைத் தூக்கில் போட முடியாது.''

அதிர்ச்சி அடைந்தான் வர்மன் குதிரையை இழுத்து நிறுத்தினான். ''என்ன சொல்கிறீர் துரை! அவர்கள் ராஜா நினைத்தால் ஒருவரைச் சிரச்சேதம் செய்ய முடியாது?''

''முடியாது.''

''நிச்சயமா?''

''நிச்சயமா! சிறையில் கூடப் போட முடியாது.''

வர்மன் பிரமித்து நின்றான். அவனால்



நினைத்து பார்க்கக் கூட முடியவில்லை.

ஒரு ராஜாவால் ஒருத்தனைத் தூக்கில் போட முடியாது. சிரச்சேதம் பண்ண முடியாது. சிறையில் போட முடியாது.

நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லையே!

இந்தத் தண்டனைகளை ஒரு ராஜா எளிதில் கொடுக்க முடியும் என்பதால்தானே ஜனங்கள் அவரிடம் ரொம்பப் பயப்படுகிறார்கள்.

விசாரணை கூடச் செய்ய வேண்டாமே, அவர் சொன்னால் சொன்னபடிதானே.

ராஜாவுக்கு இந்த அதிகாரம் இல்லாத நாடு ஒன்று உலகில் இருக்கிறது. ஆச்சரியமாக இருக்கிறதே!'

வர்மன் உடல் முழுதும் மயிர்க் கூச்சம் ஓடியது. முகத்தில் ஒரு மகிழ்ச்சி கட்டு அவிழ்ந்து வந்தது.

"ஐயா, என்னால் நம்பமுடியவில்லையே!" என்றான் பரவசமாக.

"தம்பு! அதிகாரம் இல்லாத ராஜா இருக்கிறார். பார்லெமான் மட்டும் அதிகாரம் செலுத்துகிறது."

"அதாவது ஜனங்களின் பிரதிநிதிகள்."

"ஆமாம்! அவர்கள்தான் நிர்வாகத்தை எல்லாம் கண்காணிக்கிறார்கள். இங்கே ஒரு வெள்ளைத் தளபதி ஏதாவது முறைகேடாக நடந்தால், அந்தச் செய்தி லண்டன் போகுமானால் நிச்சயம் பார்லெமான் அது பற்றி பேசி விவாதித்து அவனுக்குத் தண்டனை அளிக்கக் கூடும். ஜனங்களை ஜனங்கள் வழிப்பறி செய்தோ, ஏமாற்றியோ, வஞ்சம் செய்தோ சாப்பிட அவர்கள் விடமாட்டார்கள். சட்ட திட்டங்களைக் கடைப்பிடிப்பவர்கள் அவர்கள். அந்த இங்கிலீஷ்காரன் என்ன சொல்லிவிட்டுப் போனான், பார்த்தாயா? "நாட்டில் கொள்ளை களவு மலிந்து விட்டது! கேள்வி கேட்பார் இல்லையே!" என்று...

வர்மன் இன்னும் பரவசத்திலேயே இருந்தான். அரசு அதிகாரம் யாவும் ஜனப்பிரதிநிதிகளிடம் வந்த ஒரு நாடு உலகத்தில் இருக்கும் என்று அவனால் நம்பவே முடியவில்லை. அது மட்டுமல்ல. அதைப்போல் ஒரு அரசியல் நடைமுறையை கற்பனை கூடச் செய்து பார்த்ததில்லை. நாடு என்றால், ராஜா, மந்திரி, படைகள், என்பதைத் தவிர வேறு எதையும் நினைத்துப் பார்த்ததே இல்லை. மக்கள் பிரதிநிதிகளே அதிகாரம் வைத்திருந்தார்கள் என்பது பெரும் அதிசயமாக இருந்தது.

அந்த நினைப்பு திடீரென்று அவன் கையிலேயே ராஜாங்கப் பொறுப்பு வந்து விட்டது போல் பெருமிதம் கொள்ளச் செய்தது.

"ஐயா!" என்றான் இடைமறித்து. "இந்த கிளைவ் துரை பற்றி எல்லோரும் புகழ்கிறார்களே! இவர் நினைத்தால் கூட எதுவும் செய்ய முடியாதா?"

"சட்டதிட்டங்களுக்கு உட்பட்டுத்தான் செய்யலாம். திடீரென்று நினைத்து நாலைந்து இந்தியரைத் தூக்கில் ஏற்றிவிட முடியாது. அப்படி ஏற்றினால் உங்கள் நாட்டு அரசர்கள் வேண்டுமானால் கேட்கத் துப்பு இல்லாமல் இருக்கலாம். ஆனால் நிச்சயம் அவர்கள் பார்லெமான் அதைக் கண்டித்துக் கேட்கும்."

''கேட்குமா?''

''நிச்சயம் கேட்கும்.''

வர்மனுக்கு நிலைகொள்ளவில்லை. சொந்த நினைவில் கூட, இதுவரை ஏதோ விலங்கு இருந்து அது இப்போது பட்டென்று தெறித்து ஓடியது போல் இருந்தது.

மனம் எல்லையில்லாமல் எங்கேயோ மிதப்பது போல் இருந்தது. அந்தக் கணத்தில் பூமியில் விழுந்து புரள வேண்டும் என்று நினைத்தான். நாட்டின் நடப்பு முறைகளை நேரில் பார்த்த அவனுக்கு அது எங்கேயோ சரியில்லை குறையோடு இருக்கிறது என்று நினைத்திருக்கிறான். அது சீர் பெற வேண்டும் என்று நினைத்திருக்கிறானே தவிர, அது எப்படி சீர் பெறும் என்ற நினைப்பே இல்லை. இதனால் ராஜாங்கம், ராஜரீகம் என்பதெல்லாம் மனத்தில் அழுத்தும் ஏதோ தவிர்க்க முடியாத சுமைகளாகத் தோன்றி வந்திருக்கின்றன.

இப்போது அவன் நினைவுப்படி சீர்பெற்ற ஒரு நாடு இருக்கிறது என்று தெரிந்தும், இது நாள் வரை சுமை அழுத்தமாக அழுத்தி வந்த அந்தச் சுமை பறேரென்று விலகிப் போய் விட்டதை உணர்ந்தான்.

''துரை! துரை!'' என்று வேன் ஸானின் கைகளைப் போய்ப் பற்றினான்.

''துரை! துரை! இது நாள் வரை இது பற்றிச் சொல்லவில்லையே! எனக்குத் தெரியாமல் போய்விட்டதே!'' என்று அரற்றினான் அவன்.

சிரித்தார் வேன் ஸான்.

''தம்பி! இங்கிலீஷ்காரர்கள் அரசாளும் முறை சிறிது தெரிய வேண்டும் என்றாலும் சென்னைப் பட்டணம் போய்ப் பார்க்க வேண்டும். நீதி எப்படி வழங்குகிறார்கள், நேர்மையை எப்படிக் கடைப்பிடிக்கிறார்கள், என்று!''

சட்டென்று திரும்பிய வர்மன் கேட்டான்.

''ஐயா! இந்த பிரெஞ்சுக்காரர்கள் எப்படி?''

''ஹூம்.... இன்னும் அவர்களுக்கு முழுமையாக பிரதிநிதி ஆட்சி வரவில்லை. தான்தோன்றித்தனம் நிறைய இருக்கிறது. அவர்கள் அரசரிடம் இன்னும் அதிகாரம் நிறைய இருக்கிறது.''

''அப்போது இங்கிலீஷ்காரர்கள்தான் மேலானவர்களா?''

''நிச்சயமாக அவர்களது அரசாங்கமுறையைத்தான் ஐரோப்பிய தேசம் பூராவும் பின்பற்ற விரும்புகிறது.''

''அப்படியானால்'' என்றான் வர்மன். ''இங்கே ஏன் நம் தேசத்தில் புகுந்து இங்கிலீஷ்காரர்கள் அனாவசிய தொல்லை தருகிறார்கள்.''

''அவர்கள் தரவில்லை. வெறும் வியாபாரம் செய்ய வந்தவர்கள் அவர்கள். அதை விட்டு வேறு காரியத்தில் இறங்க அவர்களுக்கு விருப்பமில்லைதான். ஆனால் நாம்தான் அவர்களை அனாவசியமாக நமது ராஜாங்க காரியத்துள் இழுக்கிறோம். அவர்களும் நிறைய எச்சரிக்கையோடுதான் நம் இழுதலுக்கு இழுபடுகிறார்கள். தம்பி, உன் கண் முன்னாலேயே பார்த்தாயே, கொள்ளையடிக்க வந்த ஒரு கோஷ்டியை விரட்டி விட்டு, 'நாட்டில் கொள்ளை மலிந்து விட்டது' என்று நமக்காக இரக்கப்பட்டு விட்டுப் போகிறான் பார்த்தாயா! எங்கும் ஒழுங்குமுறை இருக்க வேண்டும் என்று நினைக்கிறவன் அவன். போகும் இடமெல்லாம் தனது சட்டதிட்டங்களையும் எடுத்துப் போகிறவன் அவன்.''

வாயைப் பிளந்து கொண்டு வர்மன் கேட்டான். ஒரு பெரிய அமைதி அவன் மனத்தில் நிறைந்தது. மௌனமாகவே இருந்தான். குதிரை அவன் மனோநிலை தெரிந்தது போல் மெள்ளமாக நடந்து சென்றது. வேன் ஸான் குறுநகையோடு தன் குதிரையையும் நடத்தினார்.

பின்னால் சலசலப்பு ஏற்பட இருவரும் திரும்பினார்கள்.

(தொடரும்)



சக்கரவர்த்தி அக்பரின் மனைவி நந்தா தேவிக்குத் தீர்க்க முடியாத தலைவலி. நாட்டிலுள்ள சிறந்த வைத்திய நிபுணர்கள் பார்த்து விட்டனர். ஒருவராலும் குணப்படுத்த முடியவில்லை. பீர்பாலிடம் சொல்லி வருந்தினார் அக்பர்.

''அரசே! ராணி அவர்களை இந்த மூக்குத்தியைக் கழற்றச் சொல்லுங்கள். ஒரு வாரம் கழித்து அடியேன் கூற்றிலுள்ள உண்மை புரியும்'' என்றார் பீர்பால்.

மூன்று நாட்கள் சென்றபின் தலைவலியே அரசிக்கு ஏற்படவில்லை. ''மூக்குத்திக்கும் தலைவலிக்கும் என்ன சம்பந்தம்?'' — அக்பர் வினவினார்.

''மன்னா! அந்த மூக்குத்தியிலே விலை உயர்ந்த வைடூரியம் பொருத்தப்பட்டிருந்தது. அதிலிருந்து புறப்பட்ட ஒளி மகாராணியின் விழியிலுள்ள மென்மையான நரம்புகளைத் தாக்கியதால்தான் தலைவலி ஏற்பட்டிருக்கிறது'' என்றார் பீர்பால்.

நன்றி: பீர்பால் கதைகள்.
தகவல்: எஸ். முகம்மது யூசுப்.

# ஒரு விபத்தின் விளைவாக

அர. நாகராசன்

''நம்ப பேட்டையிலே ஆக்ஸி டண்டு பண்ணிப்புட்டு ஓடிடலாம்னு பார்த்தியா... உடுவேனு... காருல ஏறிட்டா ஏரோப்ளான்ல போறதா நினைப்பு.... கண்ணு மண்ணு தெரியற தில்லே... பையன் மேலே ஏறி இருந்தா என்ன ஆயிருக்கும்...''

கண்ணிமைக்கும் நேரத்தில் — யாரும் எதிர்ப்பாராத தருணத்தில் — அந்த விபத்து நடந்து விட்டது.

சைக்கிளிலிருந்து தள்ளப்பட்டு பையன் ஒருபுறம் கிடந்தான். பையிலிருந்த பொருட்கள் பலபக்கம் சிதறியிருந்தன.

கூட்டம் கூடிவிட்டது.

காரை ஓட்டி வந்த இளைஞன் இறங்கினான். அவன் ரொம்பவும் மிரண்டு போயிருந்தான் என்பது அவன் கை நடுக்கத்திலிருந்து நன்கு தெரிந்தது. அவன் மீது தவறில்லைதான். 'ஹார்ன்' கொடுத்து விட்டுத்தான், அந்தத் தெருவில் வண்டியை ஓடித்தான். பக்கத்து சந்திலிருந்து வந்த சிறுவன்தான், அஜாக்கிரதையாகக் குறுக்கே வந்துவிட்டான்.

நல்லவேளைபையனுக்கு சின்ன 'சிராய்ப்பு தான்.'

பையன் எழுந்து சைக்கிள் ஹேண்ட் பாரை நிமிர்த்திக் கொண்டு புறப்பட எத்தனித்தான்.

''யாருடா அவன்?''

கூட்டத்தில் கணீரென்று குரல். தொடர்ந்து சாராய நெடி மணம் பரப்ப, கூடியிருந்த கூட்டம் மதிப்புக் கொடுத்து அவனுக்கு விலகிக் கொடுத்தது.



''நம்ப பேட்டையிலே ஆக்ஸிடெண்டு பண்ணிப்புட்டு ஓடிடலாம்னு பார்த்தியா... உடுவேனா... டேய் நில்லுடா...'' பையன் சைக்கிளைப் பிடித்துக் கொண்டான். ''வாடா போலீசுக்குப் போவலாம்... அப்பத்தான் கார்ல வர்ற பெரிய மனுஷங்களுக்குப்புத்தி வரும்.''

''இல்லீங்க... இந்தப் பையன்தான் குறுக்க வந்தான்...'' இளைஞன் தடுமாறினான்.

''யாருகிட்ட கதை விடறே... நான்தான் பெட்டிக் கடையாண்ட நின்னு எல்லாத்தையும் பார்த்துக்கிட்டுத்தான் இருந்தேனே... ராங் சைடில வந்து மோதிப்புட்டு, நழுவப் பார்க்கிறியா...''

அந்த இளைஞனுக்கு, 'சாராயத்திற்கு' பதில் சொல்லி விளக்க முடியாது என்று தோன்றியது.

''இந்த மாதிரி ஆளுங்களை சும்மா உடக் கூடாது... காருல ஏறிட்டா ஏரோப்ளேன்ல போறதா நினைப்பு... கண்ணுமண்ணு தெரியறதில்லே... பையன்மேல ஏறி இருந்தா என்ன ஆயிருக்கும்...?''

''ஆமாம் உடக் கூடாது... கையி காலே ஒடிக்கணும்...'' கூட்டத்திற்கு உற்சாகம் பிறிட்டது. தர்ம அடி போட கிடைக்கிற வாய்ப்பை விடலாமா...?

''அதெல்லாம் வேணும்... நீங்க போங்க நான் பார்த்துக்கறேன்... இந்தா பாரு சாரே.. பையனுக்கு அடி பட்டிருக்கு... ஆஸ்பத்திரிக்குப் போவணும்... போலீஸ்ல கம்ப்ளேண்ட் பண்ணி, கோர்ட் கேஸ்னு வந்தா ஆயிரம் இரண்டாயிரம் அபராதம் கட்டணும், என்ன சொல்றே?''

இளைஞன் விழிபிதுங்க நின்றான். இந்தக் கூட்டத்திலிருந்து விடுபட்டுப் போக முடியுமா?

''ஏதாவது நூறு இருநூறு வைச்சிருந்தா பையன் கையில கொடுங்க...'' — கூட்டத்தில் ஒருவர் இளைஞன் காதில் கிசுகிசுத்தார்.

வேறு வழி அவனுக்குத் தோன்றவில்லை. பர்ஸைத் திறந்து இளைஞன் ஐம்பது ரூபாய்த் தாளை எடுத்துப் பையனிடம் நீட்டினான்.

விலாங்கு கேஸ் என்று சாராயத்திற்குத் தோன்றி இருக்க வேண்டும். ''அம்பதைக் கொடுத்துட்டு கம்பி நீட்டிடலாம்னு பார்க்கிறியா... யாருக்கு வேணும் இந்தப் பணம்... நான் விடப் போறதில்லே... கம்பளேண்டு பண்ணப் போறேன்!''

இளைஞன் இன்னொரு ஐம்பது ரூபாயை எடுத்துப் பையனிடம் கொடுத்தான்.

இப்போது சாராயத்தின் வாயெல்லாம் பல். ''யார்ரா அது... வண்டி நின்னுடப் புடாது... உடனே கூடி நின்னுடுவாங்களே... ஒழுங்கா வழியை விடுங்கடா... நீ போ சாரு...''

வண்டி கிளம்பியது.

புறப்பட யத்தனித்த பையன் தோளின் மீது கையைப் போட்டது 'சாராயம்.'

''விவரம் தெரியாத பையனா இருக்கியே... நீ பாட்டுக்குப் போயிருந்தின்னா என்ன ஆகி இருக்கும்... பைத்தியக்காரப்புள்ளே... அந்தப் பணத்தை இப்படிக் கொடு...'' — பையனின் சட்டைப்பையிலிருந்த நோட்டை எடுத்துக் கொண்டான். ''இவ்வளவு பணம் நீ வைச்சிருந்தா போலீஸ் புடிச்சுக்கும்... இந்தா பிஸ்கட் வாங்கிச் சாப்பிடு...'' — என்று, தன் மடியில் அழுக்கேறி இருந்த இரண்டு ரூபாய்த் தாளை எடுத்து நீட்டினான். பையன் கண்கள் கலங்க சைக்கிளை மிதித்தான்.

'இன்னும்ஒரு வாரத்திற்கு 'தண்ணி' கவலையில்லே... அதற்குள் இன்னொரு கேஸ் மாட்டாதா...' 'சாராயம்' உற்சாகமாக பீடியைப் பற்ற வைத்துக் கொண்டது.

---



- யானையின் தந்தங்கள் உள்ளிருந்து வளர்ந்து வெளியே நீண்டு வருகின்றன. ஒருபொழுதும் அவை திரும்ப உள்ளே போய் வருவதில்லை. அவ்வாறே ஒரு மனிதனின் சொற்கள் மீண்டு வருவதில்லை.
- நான் விரும்புவது பணி — வெறும் பாசாங்கு அல்லது ஏமாற்று வேலை எதுவும் அன்று.
- துடுப்பைப் போடுங்கள். அதனால் ஏற்பட்ட களைப்பிற்கு ஒய்வெடுங்கள். போட்ட துடுப்பினால் விளைந்த வேகம் படகைக் கரை சேர்த்துவிடும்.
- நமது தன்னல மறுப்பு மூலம் பிறரைத் தன்னலமுடையவராக்குவதற்கு நமக்கு உரிமை இல்லை.
- பெரிய அளவினதான, வரையோயற்ற வானம் போல் விரிந்த பேராழி போல ஆழமுள்ள அன்பு — இதுவே வாழ்க்கையில் பெரும் பயன் தரவல்ல ஒரேயொரு விஷயம். இதைப் பெற்றவன் பாக்கியவான்.
- மழையில்லாப் பருவத்து மேகங்கள் பேரோசை செய்கின்றன; ஆனால் அவை மழை பொழிவதில்லை; மழைக் காலத்து மேகங்களோ ஒரு பேச்சும் பேசாமல் பூமியை வெள்ளக் காடாகச் செய்து விடுகின்றன.
- நான் ஒரு போர் வீரன். போரிட்டுக் கொண்டே மரிக்க வேண்டுபவன். விட்டுக் கொடுத்து விடுவது என்பது என்பால் கூடாது.

— **சுவாமி விவேகானந்தர்**



மயூரி

# "ஹலோ ஜெயமன்மதன்"

''ஹலோ .... மிஸ் சுதா சந்திரன் ப்ளீஸ்.''

''ஸ்பீக்கிங்.... நீங்க யார் பேசறது?''

''அடடே .... நீங்க தமிழ் பேசுவீங்களா?''

''என் தாய்மொழியே தமிழ்தானே .... நீங்க யார் பேசறதுன்னு தெரிஞ்சிக்கலாமா?''

''ஜெயமன்மதன் ... நேத்து உங்க மயூரி பாத்தோம். அந்த படம் பார்த்ததே ஒரு தனி அனுபவம்.... எப்படி சொல்றது .... சமயத்தில் நெஞ்சில் குத்தூசியால குத்திக்கிற அனுபவம்.... சமயத்தில் இடுப்பில் யாரோ கிச்சு கிச்சு மூட்டிவிட்ட அனுபவம்... சமயத்தில் யாரோ நம் இதயத்தைக் கையில் ஏந்தி பிசைகிற மாதிரி ஒரு ஃபீலிங்.... நீங்க மயூரியா நடிக்கலே... உங்க லைஃபை அதில வாழ்ந்து காட்டியிருக்கீங்க...''

''ஓ தாங்க்யூ....''

''அந்த படத்துக்கு வரதுக்கு முன்னால படத்தைப் பத்திக் கேள்விப்பட்டிருந்தோமா... கதையே இல்லையே.... இதை எப்படி ஃபுல் மூவியா கொடுக்க முடியும்னு நெனைச்சி வந்தோம்... பார்த்தா என்ன ஒரு அழகான திரைக்கதை.... இன்ட்ரெஸ்டிங் நிகழ்ச்சிகள்... படம் போறதே தெரியலைங்க....''

''டைரக்டர் சிங்கீதம் ஸ்ரீனிவாசராவ் சார் அவ்வளவு பார்த்து பாத்து படத்தை பண்ணியிருக்காரு..''

''அதான் சொல்ல வரோம்... டான்ஸ் ஆட ஆசை வெச்சிருக்கிற ஒரு பொண்ணு... அதை வேண்டாம்னு மறுக்கிற சித்தி, வாயில்லாப் பூச்சி அப்பா, முற்போக்கு சிந்தனைப் பாட்டின்னு ஒவ்வொரு காரெக்டரையும் செதுக்கி இருக்காரு.... அந்தப் பொண்ணு டான்ஸ் கத்துக்கறதும், அவ கால் ஆக்ஸிடெண்ட்ல கட் ஆறதும், அப்புறம் அவ ஜெய்ப்பூர் போய் செயற்கைக் காலை வெச்சிகிட்டு திரும்பவும் ஆட வர்றதும்னு ஒரு கதை.... அதை இந்த காரெக்டர்ஸ் எல்லாம் சேர்ந்து எப்படி கொண்டு போறாங்க... தெரியுமா.''

''அதாவதுங்க. ...''

''நாங்க இன்னும் சொல்லி முடிக்கலையே... அந்த பாட்டி முதல்ல சொல்லுதே 'நீ உங்க தாத்தா மாதிரி... சொல்றது ஒரு எடம்... போறது ஒரு எடம்'னு ....அப்புறம் சமையல்காரர் டான்ஸ் ஆடும்போது சித்தி கத்த, கற்பனையில ஏ. வி. செட்டுங்களா வருதே வீட்டுக்குள்ளே.... என்ன கலகலப்பு.... அது சரி.... உங்களுக்கு அப்பாவா நடிச்சவரு யாருங்க... முதல்ல வாயில்லா ஜென்மமா இருக்காரு... மௌனமா மயூரி டான்ஸ் ஆடறதை ஆதரிக்கிறாரு.... கடைசியில ரெண்டாவது பொண்டாட்டிகிட்ட 'மூட்றி வாயை, இது கனவில்லே நெஜம்'னு ஒரு சிறுத்தைச் சீறல். கடைசியில் மயூரிகிட்ட நெருங்கி நெஞ்சில துக்கத்தைத் தாங்கியபடி, 'ஒதுங்கி இருந்து கஷ்டப்படறதிலேயே நிறைய ஆனந்தம் இருக்கும்மா' ...என்கிறாரே.... கண்ணில் கண்ணீரை வரவழைச்சிட்டாரு.....''

''பி. எல். நாராயணன்னுது பேரு.... அவரு நடிச்சாருன்னு சொல்ல முடியாது.... அந்த காரெக்டரா வாழ்ந்தார்னு சொல்லலாம். ...''

''ஃபோட்டோகிராஃபியும் அட்டகாசங்க... குறிப்பா அந்த புறாவெல்லாம் படபடன்னு , அடிச்சிட்டு பறக்கிறது. ஒரு மந்தை குரங்குகளுக்கு நடுவில ஹீரோ, ஹீரோயின் நிக்கறது... ரோட்ல ரொம்ப நாசூக்கா ஒரு பஸ் கிராஸ் பண்ணப்புறம் ஸ்கூட்டர்ல ஹீரோ, ஹீரோயின் நுழையறதுன்னு ஃப்ரேம் பை ஃப்ரேமா பாத்துப் பண்ணியிருக்காரு....!

''எஸ். பி. பியே மயூரிக் போல இருக்கு.... ஒரு காலோட ஆடற பாட்ல ஷிகவேஷின் டாப்... அந்த உணர்ச்சி வேகம்லாம் இருக்கறதாலேயே அந்த பாட்டு ஜோரா அமைஞ்சிருக்கு.... பேட் வாங்கும் ரொம்ப ஸாஃப்டா இருக்கு... எஸ். பி. பி.யும் அவர் பங்குக்கு கொறைவைக்கலே...எங்களுக்குள்ள ஆச்சரியம்னா...

''என்ன ஆச்சரியம்?''

''உங்களுக்கு இதான் முதல் படம் - இருந்தாலும் 'டான்ஸ் ஆடுனா காலை ஒடச்சிடுவேன்னு சொல்லியே சித்தி.... கடவுளைப் பாத்து என் காலை ஒடச்சிட்டார், இனிமே ஜன்மத்துக்கு நான் டான்ஸ் ஆட முடியாது' ன்னு வசனம் வரப்போ, மூஞ்சில எப்படி எக்ஸ்பிரஷன் மாறுது.... அப்புறம் பையன் சறுக்கு மரத்தில் ஏறிப் போற ஸீனை வெச்சி முயற்சி உம், தன்னம்பிக்கையும் இருந்தா மனிதன் எதையும் சாதிக்கலாம் கறதை டைரக்டர்தான் எவ்வளவு அழுத்தமா சொல்றாரு.... ஒவ்வொருத்தரும் அவங்கவங்க ஆங்கிள்ல ரொம்ப ஸின்ஸியரா பண்ணியிருக்காங்க. படம் ரொம்ப ஜோராப் போகும்.... உங்க வாழ்க்கையை பிரதிபலிக்கிற கதைங்கறதால உங்களுக்கு டபிள் கங்கிராட்ஸ்....''

''தாங்க்யூ.''

''படத்தைப் பார்த்து நெகிழ்ந்தது போலவே ஹைதராபாத்தில் வைக்கப்பட்டிருந்த உங்க கட்டவுட்டுக்கு முன்னூறு ஊனமுற்றவர்கள் வந்திருந்து மாலை போட்டு வாழ்த்திருக்கன்னு செய்தியைக் கேட்ட போது மனசு மறுபடி உருகிடுச்சு. வாழ்த்துக்கள்!''

## யுத்தம்

"ஹலோ, அர்ஜுன் இருக்காரா?"

"ஸ்பீக்கிங்...."

"குட்மார்னிங் மிஸ்டர் அர்ஜுன்.... யுத்தம் படம் பார்த்தோம்...."

"அதில என் நடிப்பு எப்படி.... பிச்சிருச்சேன் இல்ல...?"

"அதாவது மிஸ்டர் அர்ஜுன், ஒரு இன்ஸ்பெக்டர், கடமை வீரர்; அவர் குற்றவாளிகளை கூண்டில அடைக்கிறதிலஎந்தவிதபாரபட்சமும்பார்க்கறதில்ல... ஸோ ஒரு செல்வாக்குள்ள மனுஷனை புடிச்சி (எவ்வளவோ கேஸ் அவன் மேல) ஜெயில்ல போட்டுடுறாரு.... அவன் வெளியில வந்து ஹீரோவோட குடும்பத்தைக் க்ளோஸ் பண்ணி அப்புறம் இன்ஸ்பெக்டரோட மோதி கடைசியில தர்மம் செயிக்குது.... இதில இன்ஸ்பெக்டரா வேஷம் கட்னவர் ஜோராப் பண்ணியிருக்காரு."

"என் நடிப்பு எப்படி? பிச்சி உதறிட்டேன் இல்ல?"

"வில்லனை நடிச்சவரை மாத்திரம் குறை சொல்ல முடியுமா? அவருந்தான் நல்லாப் பண்ணியிருக்காரு... அந்த ஹாஸ்பிடல் ஸீன்ல நர்ஸைக் க்ளோஸ் பண்ற இடத்தில மனுஷருக்கு மூஞ்சியில என்ன ஒரு வெறி... என்ன ஒரு வெறி!"

"என் நடிப்பைப் பத்தி சொல்லவேயில்லையே..."

"இது ஏற்கனவே ரெண்டு பேர் தொட்ட ஸப்ஜெக்ட்தான்.... இருந்தாலும் விறுவிறுப்பா எடுத்திட்டு போயிருக்காங்க... மனோசித்ரா பரவாயில்ல... எம். ஏ. படிச்ச ரிக்ஷா ஓட்டி பரவாயில்லே.... ஊறுகாய் மாதிரி இந்த சுரேஷ் – அனிதா ஜோடி. அந்தப் பொண்ணு அனிதா, சுரேஷ்கிட்டருந்து பிலிமை பாக்கெட் அடிக்கிற ஸீன்ல தியேட்டர்ல சிரிப்பு அலை பரவுது...."

"என் நடிப்பு பத்தி ஒரு வார்த்தை."



"நீங்க எங்க அர்ஜுன் நடிச்சிருக்கீங்க.... ரெண்டு ஸீன்லே காரத்தே சண்டை போட்டிருக்கீங்க. அத்தோட ஆட்டம் க்ளோஸ்...."

### கண்படப் போகிறது!

ஏன் சார்! எதற்காக இவ்வளவு அழகாக (வாரா வாரம்) அட்டைப்படம் போடுகிறீர்கள்? யாருடைய கண்ணாவது படப்போகிறது சார்! பார்சல் கட்டுமுன் சுற்றிப் போட்டு விட்டுக் கட்டுங்கள்.

தருமபுரி—2. விதியா.

### புல்லரிக்கிறது!

"சுவாமிகள் சந்நியாசியாய் இருந்து கொண்டு இப்படி ஆடம்பரமான ஆச்ரமத்தில் இருக்கலாமா? கலர் டீ.வி. எல்லாம் தேவைதானா?' கேள்விக்கு — "எல்லாம் பக்தர்கள் கொடுத்ததுப்பா, நானா கேட்கிறேன்? நானா பார்க்கிறேன்" என்று அடக்கமாக பதில் சொல்லும் சிவபாலயோகி அவர்களை நினைக்கும்போது மனம் புல்லரிக்கிறது!

தேரழுந்தூர். சி. சுப்பு.

### புதுமை பொலிகிறது!

எப்பொழுதும் வெளி நாடு சென்று வருகின்ற பிரமுகர்களை பேட்டி எடுப்பதுதான் வழக்கம். ஆனால் அவரோடு சென்ற ஒரு பத்திரிகையாளரை இன்னொரு பத்திரிகையாளர் பேட்டி எடுத்திருப்பது புதுமையாக இருந்தது.

சென்னை—5. குமரி ஜெய்

### அருமையோ அருமை

ஒரு சிறுகதையை பாராட்டினால் இன்னொரு சிறுகதை கோபித்து கொள்ளுமோ என்று அச்சப்பட வைக்கும் அளவுக்கு இந்த வார (16.6.85) சிறுகதைகள் அருமையோ, அருமை.

பெங்களூர்—10. கே.ஜி.எஃப். பழனிச்சாமி.

### சுயசரித வாடை!

'அபய ஹஸ்தம்' ஹேமா ஆனந்த தீர்த்தனின் வழக்கத்துக்கு மாறுபட்ட கதை. அதில் சுயசரித வாடை வீசுவதை எளிதில் உணர முடிகிறது. 'எழுத்துத் தொழில்' வெறும் பணம் பண்ணும் கருவியன்று; அதற்கொரு நோக்கம் உண்டு' என்பதை ஆசிரியர் ஒப்புக் கொண்டுவிட்டது புரிகிறது. ஹேமா ஆனந்த தீர்த்தனைப் பொறுத்தவரை இது ஒரு வரவேற்கத்தக்க மாற்றம்.

ஸ்ரீமுஷ்ணம். எஸ். சிவசங்கர்.

### அப்படி இப்படி

அப்படி இப்படி என்று ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்களின் படத்தைக் கதைகளுக்கும் பயன்படுத்தி விட்டீர்கள்!

சென்னை—5. புனர்வசு.

### அங்கும் இங்கும்

அங்கும் இங்கும் — நேரில் கண்டும், கேட்டும் எழுதப்பட்ட செய்தித் தொகுப்பு படுசுவை! சிறப்பான சிந்திக்க வைக்கும் இப்புதிய பகுதியை தொடர்ந்து தருவீர்களா?

கும்பகோணம்—1. பா. கிருஷ்ணதாஸ், பி. எஸ்.ஸி.

* கோவைக்குப்பயணம்செய்துவிட்டுசென்னைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார் தமிழக முதல்வர். ஒண்டிப்புதூர் வழியாக (திருச்சி ரோட்டில்) முதல்வர் வந்து கொண்டிருந்த காரை மக்கள் சூழ்ந்து கொண்டனர். அதில் எனக்குத் தெரிந்த பூக்கடைக்காரர் ஒருவர் (எம். ஜி. ஆர். பக்தர்) காருக்குப் பக்கத்தில் சென்று முதல்வரைப் பார்த்த பொழுது காவல் துறையாளர் அவரை இழுத்து வந்து கன்னா பின்னாவென்று அடித்தனர். கட்டுப்படுத்த முயற்சிப்பதை விட்டு விட்டு காட்டுத்தனமாகப் போலீஸ் கையாண்ட முறை மனத்தை வருத்தச் செய்கிறது.

கோவை—16. ரம்யா.

### துணிச்சலே சிறப்பு!

மகாராஷ்டிர முதல்வருக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குத் தமிழகத்திலிருந்து முதல் குரல் கொடுத்த வார இதழ் 'கல்கி' தான். 'பழி வாங்கப்பட்டார் பாட்டீல்' தலையங்கம் துணிச்சலான முறையில் எழுதப்பட்டுள்ளது தனிச்சிறப்பு.

மன்னார்குடி—12. ப. இராஜகோபால்.

### ஏமாற்றம்! ஏமாற்றம்!

"அந்த வகையில் நான் பெரியார் கட்சி' என்றதைப் பார்த்து, ஏதோ விபரீதமாக இருக்கப் போகிறது என்று புரட்டிப் பார்த்தால் கடைசியில் தராசு பதிலில் கடுகத்தனை கேள்வி—பதில். ப்ப்பூ..... இவ்வளவுதானா!

குரோம்பேட்டை பி.எஸ். கோவிந்தராஜன்.

(* இக்குறியிட்ட கடிதம் பரிசு பெறுகிறது)



# கிராஸ்டாக்

### மீனாட்சி அருள்

தோழிக்கு ஃபோன் போட்டபோது; மீனாட்சி திருக்கல்யாணத்துக்கு 'மெஸஞ்சர்' கிட்டே பாஸ் கொடுத்து அனுப்பிச்சிருக்கேன் சரியா ஒன்பது மணிக்கு வந்துடுங்க என்ற குரல் கேட்டது. நான் உடனே, "ஸார் பிளீஸ்! ரொம்ப வருஷமா திருக்கல்யாணம் பார்க்க ஆசை எனக்கும் ஒரு பாஸ்..." என்று கெஞ்ச, "சரி, நாளை சாயங்காலம் தேவஸ்தானம் ஆபீசில் வந்து வாங்கிட்டுப் போம்மா!" என்றது அந்தக் குரல். எப்படி என் அதிர்ஷ்டம்!

— ஆர். வாசுகி, மதுரை — 7

### உரிமையோடுதான்!

199 கூப்பிட்டு எனக்குத் தேவையான ஒருநெம்பருக்கு இணைப்புத்தரக்கோரினேன்




அதே சமயம் இன்னொரு குரல் அஹமது அண்ட் கோவின் தொலைபேசி எண்ணைக் கேட்டது. நான் சொன்னேன். 199 இலாகா ஆசாமிக்குக் கடுங்கோபம். எங்களுக்குப் பதில் நீங்கள் எப்படி அவருக்குப் பதில் சொல்லலாம் என்று பாய்ந்தார்.

உரிமையோடுதான் — அஹமது அண்டு கோவிலிருந்துதான் பேசுகிறேன் என்றதும் எதிர் முனையில் இருவருமே ஆச்சர்யத்தில் மூழ்கினர்!

— நாகை ஜி. அஹ்மது, சென்னை

### அவள் ஒரு தொடர்கதை.

ஒரு தொடர்கதையின் பதினைந்தாவது அத்தியாயம் அவனிடம் இருக்கிறதா என்று நண்பனை ஃபோனில் அழைத்துக் கேட்டுக் கொண்டிருந்தேன். "என்னிடம் இருக்கிறது" என்று கிராஸ்டாக்கில் ஒரு பெண் கூறினாள். விலாசம் கேட்டுக் கொண்டு நேரிலேயே கொண்டு வந்து தந்தாள். டெலிஃபோன் இலாக்காவுக்கு நன்றி!

— எம். இராதாகிருஷ்ணன்,
வாணியம்பாடி.

### ஃபோனில் கணக்கு; முதுகில் அடி!

பத்தாம் வகுப்பில் படிக்கும் இரு மாணவிகள் ஃபோனிலேயே கணக்கு ஹோம் ஒர்க் போட்டார்கள். டீச்சர்களைப்பற்றி இடை இடையே சுவாரஸ்யமாகப் பேசினார்கள். நான் ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தேன். திடீரென முதுகில் பலமாக ஒரு அடி விழுந்தது. அப்பாதான்! முக்கால் மணி நேரமாக வீட்டுக்கு ஃபோன் செய்து பார்த்தாராம். என்கேஜ்ட். நேரில் புறப்பட்டு வந்து விட்டார். அன்று முதல் கிராஸ்டாக் என்றாலே முதுகிலே விண்ணென்று வலிப்பது போலிருக்கும்!

— விசாலாக்ஷி, ஹோசூர்.

### கிராஸ்டாக் அல்ல, அசரீரி!

காலையில் எஸ். எஸ். எல். ஸி. ரிஸல்ட் தெரிந்து கொள்ள நண்பன் ஒருவனுக்கு




ஃபோன் செய்தேன். ஏதோ லைன் கோளாறு. அவன் குரல் கம்மி ஒலித்தது. புரியவில்லை. கவலை அதிகரித்த சமயம் கிராஸ்டாக்கில் ஒரு குரல் கவலைப்படாதேப்பா, கவலைப் படாதே என்றது. முதலில் திகைத்தவன் பிறகு அதனை ஒரு சுப சூசகமாகக் கருத கவலை ஒழிந்தது. அன்று மாலையே ரிஸல்ட் வந்து நான் பாஸ் என்று தெரிந்து கொண்டேன்.

— ஆர். சம்பத், குத்தாலம்.

### குறுக்கே பேசியதற்கு நன்றி!

நண்பனுக்கு ஃபோன் செய்ய முயன்ற போது கொல்லம் எக்ஸ்பிரஸில் செல்ல வேண்டிய ஒரு நபர் தமது நண்பரிடம் 8:45.க்கு ரயில் புறப்படுவதாகவும் ஸ்டேஷனில் வந்து சந்திக்குமாறும் கூறிக் கொண்டிருந்தார். நான் குறுக்கிட்டு ரயில் 8:15க்குப் புறப்படுவதாகக் கூறி இருவரது நன்றியையும் சுமக்க முடியாத அளவுக்கு ஏற்றுக் கொண்டேன்.

— கே. ஆர். நடராஜன், மணவாளநகர்.

## ஹலோ, இது போலீஸ்!

ஃபோனில் நண்பருடன் பேசிக் கொண்டிருக்கும்போது இடையில் ஒரு குரல் வெட்டியது. 'ஸார் ரொம்ப நேரமாய் பேசிட்டிருக்கீங்க.... இடைஞ்சலா இருக்கு.... ஃபோனை வைச்சிடறீங்களா, பிளீஸ்?' என்றது. எனக்குக் கோபமான கோபம். 'நீ ஃபோனை வைச்சுட்டு நம்பரைச் சரிபார்த்து டயல் பண்ணுய்யா' என்றேன். அப்போதும் அந்தக் குரல் அமைதியாக, 'ஸார்! இது போலீஸ் டிபார்ட்மெண்ட். ஆம்புலன்ஸ் விஷயமா அவசரமா பேச வேண்டியிருக்கு. நீங்க ஃபோனை வைச்சுட்டீங்கன்னு எங்களுக்கு லைன் கிளியராயிடும்' என்றது. பிறகு என்ன? ஒரு ஸாரி கூறி ஃபோனை வைத்துவிட்டு அதிகார தோரணையைச் சிறிதும் காட்டாத அந்த போலீஸ் அதிகாரிக்குத் தலை வணங்கினேன்.

— மு. அரங்கநாதன், சென்னை— 17.

## கைகூடாக் காதல்!

தான் ஒருதலையாய் நேசித்த பெண்ணின் வீட்டு ஃபோன் நெம்பரை என் நண்பன்




மிகவும் கஷ்டப்பட்டுக் கண்டு பிடித்து முதல் தடவையாகப் ஃபோன் செய்தபோது போட்ட கிராஸ்டாக்: ''அதெல்லாம் சத்தியமா கைகூடி வராது ஸார்! அதுக்காக நாம் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் வீண்தான்!'' பட்டென்று ஃபோனை வைத்தவன் தான் மறுபடி முயற்சி செய்யவே இல்லை.

— ஏ. சுகுமார், காஞ்சிபுரம்.

## ஏழுமலையான் விட்ட 'டோஸ்'

நானும் என் மாமாவும் சேர்ந்து திருப்பதி உண்டியலில் தலா ஐந்நூறு ரூபாய் போடுவதாகப் பிரார்த்தனை. என் பங்குப் பணம் சேராததால் திருப்பதி பயணத் தேதியை ஒத்திப்போட அவருக்கு ஃபோன் செய்தேன். ''டேய்! இந்த மாதிரியெல்லாம் தள்ளிப் போடறது எனக்குப் பிடிக்காது. உன்னால முடிஞ்சா செய். முடியலேன்னு சொல்லிடு. சொல்லிட்டுச் செய்யலேன்னு எனக்குக் கெட்ட கோபம் வரும்!'' என்று ஒரு கம்பெனி உரிமையாளர் யாருக்கோ டோஸ் விட்டுக் கொண்டிருந்தார். அவ்வளவுதான். அதை ஏழுமலையான் எனக்கு விட்ட டோஸாகவே கருதி எப்படியோ ஐந்நூறு ரூபாயைப் புரட்டி எடுத்துக் கொண்டு புறப்பட்டுவிட்டேன் திருப்பதிக்கு.

— கி. தமிழ்ப்பிரியன், சென்னை— 53.

## ''ஜஸ்ட் எ மினிட்''

சென்னை இண்டியன் ஏர்லைன்ஸ் என்குயரி அலுவலகத்துக்கு ஃபோன் பண்ணின போது கேட்ட ஒரு சுவையான கிராஸ்டாக்: ''ஒரு பெண்மணி 'டெல்லிக்குச் செல்ல எவ்வளவு நேரமாகும்?'' என்று கேட்டார். ரிசப்ஷனிஸ்ட், கால அட்டவணையைப் பார்த்துச் சொல்வதற்காக, ''ஜஸ்ட் எ மினிட்'' என்றார். ''தாங்க்யூ'' என்று கூறி மறுமுனையில் ஃபோன் வைக்கப்பட்டுவிட்டது!

— ஆர். வெங்கடேஷ், திருப்பத்தூர்.

## கிராஸ்டாக் நடத்தி வைத்த கல்யாணம்!

பி.எஸ்ஸி. 'பிராக்டிகல்' தேர்வு அன்று



சந்தேகம் கேட்க என் தோழிக்கு ஃபோன் செய்யப் போய், இருவர் பேசும் குரல்கள் கேட்டன. அதில் ஒருவர் குரல் என்னை மிகவும் வசீகரித்தது. ஆனாலும் பத்து நிமிஷத்துக்கு மேல் பொறுமை இழந்து 'ஸார், எவ்வளவு நேரம் காத்திருப்பது. உங்கள் பேச்சை அப்புறம் தொடருங்கள். இப்போ ரிஸீவரை வைத்து விடுங்கள்' என்று கோபமாகச் சொன்னேன். அடுத்த சில நாட்களில் அடிக்கடி அவர் குரல் கிராஸ்டாக்கில் ஒலிக்க பேச்சு வளர, நட்பு மலர, என் நெம்பர் கேட்டுக் கொண்டும் விலாசம் தெரிந்து கொண்டும் பெற்றோருடன் வந்து பார்த்தார். பிடித்துப் போயிற்று. பிறகு என்ன? கிராஸ்டாக் நடத்தி வைத்த கல்யாணம் ஜாம் ஜாமென்று நடந்தது!

— மைதிலி சீனிவாசன், பெங்களூர்— 11.

## ஃபிரான்ஸிலும் தமிழோசை!

பிரான்ஸில் கிரெனோபிள் என்ற இடத்தில் நாங்கள் வசித்து வந்தபோது, சமையல் சாமான்கள் பாரிஸில் ஷா அண்டு கோவில்





கிடைக்கும் என்று தகவல் அறிந்து ஃபோன் செய்து அகராதியை எதிரில் வைத்துக் கொண்டு சிரமப்பட்டு அரைகுறை ஃபிரெஞ்சில் ஆர்டர் கொடுத்துக் கொண்டிருந்தோம். திடீரென்று இடையில் ஒரு குரல் "வெல்லமும் ஒரு கிலோ போடப்பா" என்று ஒலித்தது. முதலில் தூக்கிவாரிப் போட்டாலும் விசாரித்ததில் ஷா அண்டு கோவை நடத்துகிறவரே ஒரு பாண்டிச்சேரி தமிழர் என்று தெரிய வந்தது. கிராஸ்டாக்கில் பேசியவரும் உற்ற நண்பரானார்.

— ராஜி ராமமூர்த்தி, பம்பாய்— 94.

## குணம் தெரிந்தது!

நண்பருக்கு ஃபோன் போடப்போக இருவர் பேசிக் கொண்டிருப்பது கேட்டது. சந்தேகப்பட்டுக் கவனிக்க, அந்தப் பையன் எனது சொந்தக்காரப் பொண்ணுக்காக பேசப்பட்டு வருபவன்தான் என்று உறுதியாயிற்று. அவன் வேறு ஒரு பெண்ணிடம் தன்னை அவள் வந்து சந்திக்க வேண்டிய இடம், நேரம் முதலானவற்றைக் கூறிக் கொண்டிருந்தான். நல்லகாலம், பையனின் குணம் புரிந்து விட்டதால் பெண்ணுக்கு வேறு வரன் பார்த்து முடித்து விட்டோம்!

— எம். கே. மாலிக், கொல்லம்.

## நங்கையல்ல நகை!

"டார்லிங்! நகைகளை, துணிமணிகளை பாக் பண்ணிக் கொண்டு சரியாக மூன்று மணிக்கு சென்ட்ரல் பஸ் ஸ்டாண்டுக்கு வந்து விடு! மூன்றரைக்கு பஸ். பழனியில் நாளைக்கு நம்ம கல்யாணம்!"

"சரி" என்றது பெண் குரல்.

அவசரமாக மாட்டுத்தீவனம் வரவழைக்க போன் செய்தபோது கேட்டது இந்த கிராஸ் டாக். குரல் கடைப் பையனுடையதைப் போலிருக்கவே சந்தேகத்தின் பேரில் உடனே கடைக்காரரிடம் நேரில் சென்று எச்சரித்தேன். அவரும் விழிப்படைந்து விசாரிக்கத் தம் மகளுடன் கடைப் பையன் தலைமறைவாகி விடத் திட்டமிட்டிருப்பதைக் கண்டுபிடித்தார். மகளை விட நகைகள் மீதே குறியாக இருந்த அவனும் தன் திட்டம் அம்பலமானது அறிந்து ஓடிவிட்டான். பின்னால் அந்தப் பெண்ணுக்கு நல்ல வரன் அமைந்து கல்யாணம் நடந்தபோது எனக்குத்தான் பெண் வீட்டாரின் முதல் மரியாதை!

— வஸந்தி ராஜகோபால், கோவை— 9.

'புளோபிளாஸ்ட்' வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

வசந்தி ராஜகோபால்,
7, விவேகானந்தா சாலை,
ராம்நகர், கோவை 641 009.



மேலட்டையில்.......

குமாரி சோபனா

வண்ணப்படம்:

சரஸ்வதி சத்யமூர்த்தி






PHILIPS

## Making every weld a better weld






# Electrodes for Cast-Iron Welding

Philips offers a range of electrodes specially recommended for repair welding of cast iron, giving both machinable and non-machinable welds. Available in pure nickel, cupro-nickel and ferro-nickel versions with excellent colour matching. Each electrode in the range conforms to stringent international specifications.

Applications include the repair and salvage of engine blocks, compressors and other machinery for transport, steel plants, power generation and in the mining and sugar industries.

These electrodes are part of a continuously expanding range from Philips. In addition, Philips offers an extensive range of equipment and a complete spectrum of technical services. Making it the total welding company. So, come to Philips for all your welding needs. Because, when it's Philips, you're sure.

For more information or application support, write to

Philips India
Welding Division
P.O. Box 120
Thane Head Post Office,
Maharashtra 400 601.

OBM/4429 R

**Philips — the trusted Indian household name for over fifty years**

# ஆகாச கங்கை

## 25

மானேஜர் ஆராமுதனுடைய மனைவி ரங்கம் என்கிற ரங்கநாயகி காரிலிருந்து இறங்கினாள். கதவைத் திறந்து விட்ட டிரைவர், சற்றே ஒதுங்கி நிற்க அவள் ஒரு கையில் வெள்ளித் தட்டும் இன்னொரு கையில் எவர் சில்வர் தூக்குமாக நடந்தாள். இலேசாகத் திரும்பிப் பார்த்தாள். அவளுடைய உத்தரவின்படி டிரைவர் ஒரு சிறு கூடையுடன் பின் தொடர்ந்தான்.

நல்ல மதமதவென்ற உடற்கட்டு. பொன் னிறம். அமைதியாகப் படிந்த மோதிரச் சுழல் கேசம். நெற்றியில் குங்குமத்தைப் பொட்டாக இடாமல் ஒரு சிறு நாமமாகத் தீட்டியிருந்தாள். காதுகளில் வைரங்கள் ஜொலிக்க, மூக்கின் இரு பக்கங்களிலிருந்தும் மூக்குத்தியும் பேஸரியும் ஒளியை உமிழ்ந்தன.

அரவிந்தன் கதவைத் திறந்தான். டாஜ் ஓட்டலுக்கு மாயாவுடன் சென்று தாரக் ராமைச் சந்திக்க முடிவு செய்திருந்த அவன் இந்த வேளையில் மிஸர்ஸ். ஆராமுதனை எதிர் பார்க்கவில்லை. எதற்காக வந்திருக்கிறாள் என்று அவனுக்குப் புரியவில்லை.

படி ஏறிய ரங்கம், "என்னப்பா, அரவிந்தா, சௌக்கியமா இருக்கியா...? உன் மனைவி சௌக்கியமா?" என்று கேட்டாள். அவளுக்கு மூச்சு சற்று வாங்கியது.

"இன்னிக்கு மெட்ராஸ்லே அடை மழை தான்... வாங்கோ!" என்றான், அரவிந்தன். பிறகு, "இதெல்லாம் என்ன?" என்று கேட்டான், டிரைவர் வைத்த கூடையைச் சுட்டிக் காட்டியவாறு.

"சொல்றேன்... இந்தாப்பா வேணு, ஒரு அரை மணி நேரம் ஆகும்... நீ சிகரெட் குடிக்கறதானால் காருக்குள்ளே உக்கார்ந்து குடிக்காதே அப்புறம் காரெல்லாம் நாறும் வெளியே எங்கேயாவது நெழல்லே ஊது..." என்றாள். டிரைவர் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

"எங்கே மாயா?" என்றாள்.

"இப்ப வருவா."

"நான் வெள்ளிக்கிழமை வெள்ளிக்கிழமை வெல்லக் கொழுக்கட்டை பண்ணித் தாயாருக்கு நைவேத்தியம் செய்ஞ்சு தெரிஞ்ச சுமங்கலிகளுக்குக் கொடுத்துண்டு வரேன்..."

"பிரார்த்தனையா?"

"வேறே என்ன? கல்யாணமாகாம பொண்ணு குதிரையாட்டமா நிக்கறாளே... அது பி.யூ.ஸி. முடிச்ச உடனே எவன் தலையிலாவது கட்டி அனுப்பிச்சிருக்கணும்... இப்ப எம். எஸ். ஸி. பாஸ் பண்ணிட்டு பி.எச்.டியைக் கொண்டு வாங்கறது. நம்ப நாட்லே எங்கே பி.எச்.டி அவ்வளவு ஈஸியா கெடைக்கறது? எல்லாம் அமெரிக்காவுக்கு ஓடறதுகள்..."

"இந்தக் கொழுக்கட்டை ஸ்மார்த்தா தான் பண்ணி, அம்பாளுக்கு காட்டுவான்னு நெனைச்சேன்!"

"எல்லாம் ஒண்ணுதான்டா... ஹரி, ஹரன் எல்லாம் ஒண்ணுதான். குறுக்கே போட்டா என்ன, நெடுக்கே போட்டா என்ன?"

"அந்து, யார் இந்த மாமி? நன்னா அழகா, வக்கணையா பேசறா? ராஜம்மா கூட இப்படிப் பேச மாட்டா!"

"மாயா! இவன்தான் மிஸர்ஸ் ஆராமுதன்."

"நமஸ்காரம் மாமி! உங்க பட்டுப்புடவை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு."

"காஞ்சீபுரம் பட்டும்மா... வாங்கி எழு வருஷம் ஆறது... அன்னிக்கே தொள்ளாயிரம்... இன்னிக்கு ரெண்டாயிரம்..."

"விலையை விடுங்கோ, மாமி! இது அரக்குக் கலர்தானே?"

"ஆமாம் குழந்தை! உனக்கு எல்லாம் தெரிஞ்சிருக்கு."

அரவிந்தன் ஆச்சரியப்பட்டுப் போனான்.

"இந்தாம்மா கிழக்கு பக்கமாப் பார்த்து இதையெல்லாம் வாங்கிக்கோ," என்றாள் ரங்கம். பிறகு, "அந்து, நான் என்னோட நாப்பத்தஞ்சு வயசிலே உன் மனைவி மாதிரி ஒரு அழகியை நான் பார்த்ததில்லே!" என்றாள்.

மாயா சிரித்தாள்.

"நீங்களும்தான் காஷ்மீர் ஆப்பிள் மாதிரி, செக்கச் செவேல்னு குண்டா கொழு கொழுன்னு இருக்கேள். பல்லு பளிச்சுன்னு மின்னறது... நீங்க டீ. வி. அட்வர்டைஸ் மென்டில் வந்தா நன்னாயிருக்கும். என்ன அந்து, கரெக்ட்தானே?"



பி. வி. ஆர்.

ரங்கம் சிரித்தாள். பிறகு—

''இதை வாங்கிக்கம்மா,'' என்றான்.

''வாங்கிக்கோ மாயா.''

தட்டில் வெற்றிலைப் பாக்கு, மஞ்சள், குங்குமம், பழம், ஒரு சோளித் துண்டு, எல்லாம் இருந்தன.

''இந்த மாமியை நான் விழுந்து நமஸ்காரம் பண்ணட்டுமா, அத்து?''

''ஏம்மா கேக்கறே? பண்ணு.''

இதை எதிர்பாராத ரங்கம் மெய்சிலிர்த்துப் போனாள். இவளுக்கா மனப்பிராந்தி?

''நீ நன்னா அமோகமா வாழணும்மா குழந்தே!'' என்று ரங்கம் கூறிய போது அவளுடைய நாத் தழுதழுத்தது.

''மாயா, இதையெல்லாம் எடுத்துண்டு நீ உள்ளே போம்மா,'' என்றான் அரவிந்தன். மிஸர்ஸ் ஆராமுதனுடன் ஓரிரு வார்த்தைகளாவது பேசிவிட வேண்டும் என்று அவன் உள்ளூறக் கறுவினான்.

''சரி, அத்து... நான் மறுபடியும் இங்கே வரவேண்டாம் இல்லியா?''

''உன் இஷ்டம்...'' என்றான் அரவிந்தன்.

''ஏம்மா நீ ஸ்நானம் பண்ணிண்டிருக்கியா?'' என்று கேட்டாள் ரங்கம்.

''கார்த்தாலே கூட குளிச்சேனே?''

''நான் இந்தக் குளியலைக் கேட்கலேம்மா...''

''வேறு என்ன குளியல்? ஆயில் பாத்தா..? அது போர்...ஷூட் இருந்தா ஷாம்பூ தேய்ச்சுக் குளிப்பேன்.''

ரங்கம் மேலே தொடரவில்லை. ஆனால் ஒன்று மட்டும் அவளுக்குப் புரிந்து விட்டது. மாயா இன்னும் பெண்ணாகத்தான் இருக்கிறாள். மனைவியாக மலரவில்லை.

மாயா சென்றதும், அரவிந்தன் கேட்டான். ''என்ன மிஸர்ஸ். ஆராமுதன்... என்ன விசேஷம்?'' என்று.

ரங்கம் அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''ஏன் அப்படிப் பார்க்கிறேள்? யார் உங்களைத் தூது அனுப்பியிருக்காங்கன்னு எனக்குத் தெரியும்.''

''என்னப்பா, அ ர வி ந் தா, நீ சொல்றே?''

''மாயா இங்கே வந்து பத்து வெள்ளிக்கிழமை ஆயாச்சு. இதுநாள் வரையில் நீங்க உங்க தலையைக் காட்டினதில்லே... என் மாமனார் டாஜ் ஓட்டல்லேந்து விரலைச் சொடுக்கறார். ஆராமுதன் உங்களை முடுக்கி விடறார்... நீங்க மஞ்சளும் குங்குமமும் பழக்கூடையுமா படி ஏறி வரேள். என் மனைவி உண்டாயிருக்காளான்னு விசாரிக்கிறேள்... எல்லாம் எனக்குத் தெரியும், மிஸர்ஸ். ஆராமுதன்.''

இனிமேலும் தர்க்கம் பண்ணுவதிலோ மறுப்பு தெரிவிப்பதிலோ அர்த்தம் இல்லை என்று ரங்கத்துக்குப் பட்டது.

''நான் வரேம்ப்பா... நீ இவ்வளவு புத்திகூர்மையுள்ளவன்னு நான் நினைக்கலே...''

''நீங்க மட்டுமில்லே... அந்தத் தாரகராமும் நினைக்கலே...''



பெங்களூரிலுள்ள புகழ் பெற்ற எம். டி. ஆர். என்று அழைக்கப்படும் 'மாவல்லி டிபன் ரூமில்' பச்சை மாங்காய், பச்சை மிளகாயின் சேர்க்கையில் மிகக் காரமாக பச்சடி போல் ஒரு அயிட்டம் வழங்குகிறார்கள். அதன் பெயர் 'மகாபாரதா' என்பது!

— பத்மா தேசிகன்.

''நான் வரேன்.''

''கொழுக்கட்டை கொண்டு வந்த பாத்திரத்தைத் தரேன், இருங்கோ!'' என்றான் அரவிந்தன். பிறகு சிரித்துக் கொண்டே, ''என் மாமனாருக்கும் கொடுத்திருப்பாரே மானேஜர்!'' என்றான்.

○ ○ ○ ○ ○

வசுமதி வந்தாள். அவளுடைய பேதைமையை நினைத்து வருந்திய அரவிந்தன் தன் சினத்தை வெளிக்காட்டவில்லை. முந்தின இரவு அவள் வந்தது தவறு. அவன் வீட்டிலே உறங்கியது தவறு. ஏன் அவனுடைய வீட்டுக்கு அவள் வருவதே தவறு. இருப்பினும் சரியான சமயம் வரும் வரையில் அவன் பொறுமையாக இருக்க வேண்டும்.

''என்ன வசு, கோர்ட்டுக்குப் போகலையா?''

''இல்லை,'' என்றாள் வசுமதி. சொன்னவள், ''ஏன் டேப் ரிக்கார்டர் இப்படி கனைவிடறது'' என்றாள்.

''மாயா தன் வழியில் சங்கீதத்தை ரசிக்கிறாள்,'' என்றான்.

''அவள் வழி சரியில்லை, அரவிந்த்.''

''அப்படித்தான் எனக்கும் படறது வசு.''

''அரவிந்த்! நீங்க உங்க தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக்கிட்டீங்க!''

''அதுக்கு நீயும் காரணம்! இல்லியா?''

வசுமதி மௌனம் சாதித்தாள்.

''நீதான் உன் தலையிலே மண் வாரிப்போட்டுண்டு இப்ப பித்துப் பிடிச்சவ மாதிரி நிக்கறே, வசு!''

''நீங்க நெனைச்சா, என் பித்தம் தெளியும், அர்விந்த்.''

''ஷ்யூர்... நான் என்ன செய்யணும், சொல்லு.''

''நம்ம காதல் பவித்திரமான காதல், அர்விந்த்... நான் என்னென்னவோ கோட்டைகளெல்லாம் கட்டினேன்.''

''அதையெல்லாம் நீயே உன் லட்சிய வெறியாலே இடிச்சுத் தள்ளினே வசு.''

"இடிஞ்சு போனதை மறந்து... மறந்து..." வசுவுக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது.

"டு லேட் வசு."

"இல்லே, அர்விந்த்... எதுவும் டு லேட்டாக இருக்க முடியாது..."

"வசு..."

"உம்..."

"கொஞ்சம் பிளேட்டை மாத்திப் போட்டுப் பாரு!"

"புரியலே..."

"நீ விதி வசத்தாலோ அல்லது ஒரு லட்சியம் காரணமாக உன் காதலனை அப்புறப்படுத்திவிட்டு ஒரு பைத்தியத்தைப் புருஷனா வரிக்கிறே. உன் பழைய காதலன் அடிக்கடி உன்னைச் சந்திக்கிறான். பைத்தியக்காரப் புருஷனை ஒரு ஆஸ்பத்திரியில் அட்மிட் பண்ணிட்டு, டாக்டர் சர்டிபிகேட் மூலமா அவன் கிட்டேந்து விடுதலை வாங்கித் தரேன் என்கிறான்... அப்ப நீ என்ன செய்வே!"

வசுமதி தயங்காமல் பதில் சொன்னாள்.

"என் காதலனுடைய அட்வைஸ் படி நடப்பேன், அர்விந்த்... ஏன்னா வாழ்க்கை வேறு, லட்சியம் வேறு. லட்சியப்படி வாழ்க்கை அமைய முடியாமல் போறப்ப, வாழ்க்கையை வேறுவிதமா அமைச்சுக்கறதுதான் விவேகம்... அக்னி சாட்சியா தாலி கட்டினவன்ங்கற ஒரு காரணம் ஒரு பெண்ணோட நல்ல வாழ்க்கைக்குக் குறுக்கே வரக் கூடாது... எங்க பாட்டி ஒரு பழமொழி சொல்லுவா..."

"அதையும் கேக்கறேன், சொல்லு வசு!"

"அசட்டு ஆம்படையானோடு ஆயிரம் காலம் வாழறதை விடச் சமர்த்து ஆம்படையானுக்கு வாழ்க்கைப்பட்டு, சரேல்னு அறுத்துடறது மேல்னு."

"இது கேட்க நன்னாயிருக்கும், வசு... ஆனா அசடைக் கட்டிண்டு, அதைச் சமர்த்தனா மாத்தறதுதான்- ஒரு மனைவியின் கடமைன்னு நினைக்கிறேன்!"

"ஆனா... ஆனா... நீங்க பெண் இல்லே... மாயாவும் உங்க புருஷன் இல்லே, அர்விந்த்!"

"தம்பதிகளுக்குள்ளே ஆண் பேதம் பெண் பேதம் இல்லே... பெண்களோட கற்பை அழிச்சவன் ஆண் என்பதால்தான் பெண்கள் தங்கள் கற்பைக் காப்பாத்திக்கணும்னு எச்சரிச்சாங்க. ஆனா சக்தியுள்ள ஓர் ஆணுக்கு இந்த எச்சரிக்கை தேவையில்லே, வசு! அவனுக்கும் கற்பு உண்டு. ஆனா அதை பறை கொட்ட வேண்டிய அவசியம் இல்லே..."

வசுமதி தளர்ந்து போனாள்.

**கண்கள் கனத்தன.**

கன்னங்களில் நீர் வழிந்தது.

"நான் என்ன செய்தால் உங்களை ஜெயிக்க முடியும், அர்விந்த்?"

அரவிந்தன் சிரித்துக் கொண்டே பதில் சொன்னான்.

ஆனால் அது வசுமதியை நடுங்க வைத்தது.

(தொடரும்)

## அருள்வாக்கு

**நாம் பக்தி செய்வதால் ஈசுவரனுக்கோ குருவுக்கோ ஒரு லாபமும் இல்லை. நமக்கேதான் பெரிய லாபம். என்ன லாபம் என்றால்,**



**நாம் அழுக்கு உடையவர்களாக இருக்கிறோம். சஞ்சலம் உடையவர்களாக இருக்கிறோம். மனசை ஒரு நிமிஷம் கூட ஓர் இடத்தில் நிறுத்த முடியாதவர்களாக இருக்கிறோம். எப்போதும் சுத்தமாக நிரம்பிய ஞானம் உடையவனாக அசங்காமல், ஆடாமல் பட்ட கட்டை மாதிரியாக இருக்கிறவனை நாம் நினைத்தால்தான், நாம் நினைக்கிற அவனது நிச்சலமான நிலை நமக்கும் வரும். நாமே அவனாக ஆகிவிடுவோம். ஈசுவரனைத்தான் அப்படி நினைக்க வேண்டும் என்பது இல்லை. இப்படிப்பட்ட குணங்கள் உடையதாக எதை நினைத்துக் கொண்டாலும், நம்மைப் போன்ற ஒரு மனிதரையே இவ்வளவு குணங்கள் உடையவராகக் கருதி, அவரையே குருவாக நினைத்து பக்தி செய்தாலும் நாம் அப்படியே ஆகிவிடுவோம். மனஸ் நின்றால்தான் ஆத்மா பிரகாசிக்கும்; அதாவது நமது நிஜமான ஆத்மா பிரகாசிக்கும்; அதாவது நமது நிஜமான ஆனந்த நிலை தெரியும். மனசை நிறுத்துவதற்காகத்தான் குரு பக்தி வேண்டும், ஈசுவர பக்தி வேண்டும் என்று நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன.**

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# உசத்தி சரக்குக்கு உண்டியல் பணம்

குன்னூர். சிவா-காமராஜ்

"உண்டியலை உடைச்சி காசை எடுத்துட்டுப் போனது நீங்கதானே ...?" சீறினாள் பார்வதி.

"ஆமாம், எடுத்துட்டுப் போனேன். எத்தனை நாளைக்குத்தான் இந்த சாராயத்தை மனுசன் குடிச்சிட்டு இருக்க முடியும்னு நினைக்கறே.... ஒரு நாளைக்காவது கொஞ்சம் உசத்திச் சரக்கா... பீர், ஒயினுன்னு சாப்பிட ஆசை.... இன்னைக்கி உன் தயவாலே.... பீர் வாங்கி அடிச்சேன்.....!"

**பா**ர்வதியும் அவள் கணவன் வரதனும் தினக்கூலிக்காரர்கள். பார்வதி முருகபக்தை. வரதன் கொஞ்சமும் பக்தியற்றவன். மொடாக் குடிகாரன். அவன் சம்பாத்தியம் முழுவதும் அவன் குடிப்பதற்கே சரியாகப் போய்விடும். பார்வதியின் சம்பாத்தியம் ஒன்றுதான் இருவரின் வயிற்றையும் நிரப்பி வந்தது. அவளுக்கு வேலை கிடைக்காத நாட்களில் இருவரும் பட்டினிதான். அப்படி அவள் பட்டினியாகக் கிடக்கும் போது கூட முருகனுக்கு பூஜை செய்வதை நிறுத்துவதில்லை. சோத்துக்கே லாட்டரியடிக்கும் போது பூஜை என்ன வேண்டி கிடக்கிறது'' என பலர் பரிகசிப்பதையும் பார்வதி காதில் போட்டுக் கொள்வதில்லை. பத்து பைசாவிற்குப் பத்தியாவது வாங்கிக் கொளுத்தி வைத்தால்தான் அவள் மனம் நிம்மதியடையும்!

வரதன், "ஏண்டி, அந்தப் பாளாப்போன கடவுளுக்குக் காசை இப்படி தெனைக்கும் செலவு செய்ற.... ஏதோ மாசத்திற்கு ஒரு நாள் இரண்டு நாள் செய்து தொலைச்சா பத்தாதா?'' எனக் கோபிப்பான். அதற்கு பார்வதி, "நீங்க குடிச்சிட்டு வந்து அடிப்பதையும், உதைப்பதையும் பொறுத்திட்டு போற மனசையும், சம்பாதித்து பத்து பைசா கொண்டு வந்து பொண்டாட்டி கையிலே கொடுக்க யோக்கியதை இல்லாத உங்களுக்குச் சம்பாதித்து ஆக்கிப் போடுற சக்தியையும் எனக்குக் கொடுத்திருக்கானே... அவனுக்குக் கால் ரூவா செலவு செய்யறதினாலே உனக்கு என்னய்யா... அப்படி குறைஞ்சி போயிடுது....'' எனக் கேட்டு அவனை திணற அடிப்பாள். அவளின் இது போன்ற பதிலினால் அவன் ஆத்திரமடைவான். சில நேரங்களில் அடித்தும் விடுவான். இந்த அடிகளையும், பேச்சுக்களையும், ஒரு வித மன உறுதியுடன் தாங்கிக் கொள்வாள். ஆனால் அந்த முருகனைத் தாழ்த்திப் பேசுவதை மட்டும் அவளால் பொறுத்துக் கொள்ள முடியாது.

ஒரு நாள் கார்த்திகை தினம். அன்று எப்படியும் முருகன் கோவிலுக்குச் சென்று வந்து விட வேண்டுமென்ற முடிவுடன், வேலையை முடித்துக் கொண்டு வேகமாகக் குடிசைக்குத் திரும்பினாள் பார்வதி. அப்படியே பல நாட்களாக உண்டியலில் சேர்த்து வைத்திருக்கும் பணத்தில் ஒரு கண்ணாடி போட்ட முருகன் படம் வாங்கி விட வேண்டுமென்பதையும் அப்போதே தீர்மானித்து விட்டிருந்தாள்.

அவசரம், அவசரமாகப் பாத்திரங்களைத் தேய்த்து, கஞ்சி காய்த்து விட்டு, குளித்து முடித்து, கோவிலுக்குச் செல்ல கிளம்பியவளுக்கு அதிர்ச்சி. வைத்த இடத்தில் உண்டியலைக் காணவில்லை. குடிசை முழுவதும் அலசினாள். ஓரிடத்திலும் அகப்படவில்லை. காலையில் வரதன் அவளிடம் "துட்டு இருந்தா கொடுத்துட்டு போம்மே'' எனக் கேட்டதும், பார்வதிக்கு ஒருகணம் நிழலாடியது. குடிப்பதற்காக வரதன்தான் உண்டியலை எடுத்துச் சென்றிருக்க வேண்டுமென்பதை ஒரு நொடியில் உணர்ந்தாள். அவனின் அந்தச் செயல் பார்வதியைக் குமுறச் செய்தது.



மணி இரவு எட்டை நெருங்கிக் கொண்டிருந்தது. வரதன் நிதானமிழந்தவனாகக் குடிசையை நோக்கித் திரும்பினான். ''அங்கேயே நில்லுங்க....'' என்று ஆக்ரோஷத்தோடு தடுத்து நிறுத்தினாள் பார்வதி. அவளின் அதட்டல் அவனை ஒன்றும் செய்யவில்லை. என்னய்யா .... நிக்கச் சொல்ற.... இப்போ ஸ்டெடியா நிக்கறது கொஞ்சம் கஷ்டமாச்சேடி.....'' என்றான் அலட்சியமாக.

''உண்டியலை உடைச்சி காசை எடுத்துட்டுப் போனது நீங்கதானே ....?'' சீறினாள் பார்வதி.

''ஆமாம், நான்தான் எடுத்துட்டுப் போனேன். அதில அப்படி ஒண்ணும் ரொம்ப இல்லடி பதினெட்டு ரூபாய் சொச்சந்தான் இருந்திச்சு.... இதுக்குப் போய் ஏன் இப்படி கத்தறே....?''

''ஒரு முருகன் படம் வாங்கணும்னுதானே உயிரைக் கொடுத்துச் சேர்த்து வைச்சிருந்தேன்.... அதை எடுத்துட்டுப் போய்க் குடிச்சிட்டு வந்து நிக்கறீங்களே, இது உங்களுக்கே நல்லாயிருக்கா....?'' என்று கத்தினாள்.

''ஏய். உன் புருஷனோட சுகத்தை விட அந்த முருகனைக் கண்ணாடியிலே மாட்டி வைக்கிறது உனக்குப் பெரிசாப் போயிடுச்சா...

''உங்க சம்பாத்தியத்தைத்தான் குடிச்சு தீர்க்கறீங்க.... அது பத்தாதுன்னு இதையும் எடுத்துட்டுப் போனீங்க....''

''என் சம்பாத்தியத்திலே சாராயம்தான் குடிக்கலாம். எத்தனை நாளைக்குத்தான் இந்த



சாராயத்தை மனுசன் குடிச்சுட்டு இருக்க முடியும்னு நினைக்கிறே..... ஒரு நாளைக்காவது கொஞ்சம் உசத்திச் சரக்கா.... பீர், ஒயினுன்னு சாப்பிட ஆசை... இன்னிக்கி உன் தயவாலே....பீர் வாங்கி அடிச்சேன்!''

''நீங்க பீரும், ஒயினும் வாங்கிச் சாப்பிட முருகன் படம் வாங்கச் சேர்த்து வைச்சிருந்த என் காசுதான் அகப்பட்டுச்சா....?''

''கடவுள்தான் தூணிலேயும், துரும்புலேயும் இருக்காரில்லே.... பேசாம அந்தக் காலண்டரையே கும்பிட்டுத் தொலைக்க வேண்டியதுதானே ....?''

''எதை எப்படிக் கும்பிடணுங்கறது எனக்குத் தெரியும். சேர்த்து வைச்ச காசை ஏன் தூக்கிட்டுப் போனீங்கன்னுதான்....?''

''கேட்டேன். கொடுக்கலே.... எடுத்துட்டுப் போயிட்டேன்.....'' என்றான் சாதாரணமாக.

''எவன்கிட்டேயாவது குடிக்கக் காசு கேட்டு, அவன் குடுக்கலேன்னா உடனே எடுத்துட்டு வந்துடுவீங்களா.... பிச்சுப்புடுவான் பிச்சு.....''

''அடுத்தவனுக்கிட்டே போனாத்தானேடி.. என் பொண்சாதிகிட்டேயிருந்துதானேடி எடுத்தேன்....!''

''பொண்டாட்டியோட படுக்கையைப் பகிர்ந்துக்குறதுன்னாலும் அவ அனுமதியோடதான் நடந்துக்கணும். தெரிஞ்சுக்குங்க...அப்படியிருக்கும்போது நான் சேர்த்து வைச்சிருந்த காசை, நான் இல்லேன்னு சொன்ன பிறகும் என்ன நினைச்சிட்டு எடுத்துட்டுப் போனீங்க....'' வெடித்தாள் பார்வதி.

''சும்மா அலட்டிக்காதே. இனி உன்னால என்ன செய்ய முடியுமோ செய்துக்க....'' கடுகடுத்தான் வரதன்.

''நான் உங்களை என்ன செய்யப்போறேன். அந்த முருகனைப் பார்த்து ஏதாவது புத்தி கொடுத்தாத்தான் உண்டு'' என்றாள் பார்வதி அலுப்பு மேலிட்டவளாக.

''அவனவன் சாமி சிலையைத் திருடிட்டுப் போய், உருக்கி உல்லாசமாய் வாழ்ந்திட்டிருக்கான்.... அவனுங்களையே இந்தக் கடவுள்க ஒண்ணும் செய்யல்லே.... என்னை இந்தப் பதினெட்டு ரூபாய்க்குப் பெரிசா தண்டிக்கப் போறானாக்கும்''.

''இந்தக் குடிப்பழக்கம் இருக்குற வரை உங்களுக்குப் புத்தியும் வரப் போறதில்லே'' என்றவளை இழுத்து அடித்தான் வரதன் வெறி தீர அடித்ததும் திண்ணையில் சென்று முடங்கிக் கொண்டான். அடிபட்ட பார்வதி முருகன் காலண்டர் முன்பு போய் விழுந்தாள்.

''அப்பனே! உங்கிட்டே நான் என்ன கேட்கிறேன், காரும் பங்களாவுமா.... இல்லையே.... நான் உனக்கு பூஜை செய்வதை தடுக்காத உன் மேல் பக்தியுள்ளவனாக என் புருஷனை மாற்றித்தா எனத்தானே கேட்கிறேன். அதைவிடுத்து நீ எனக்குப் பல கஷ்டங்களைக் கொடுக்கின்றாயே, ஏன்..... இந்தக் கஷ்டங்களால் உன்னை நான் வெறுக்கத் தொடங்கி விடுவேன் என நினைக்கிறாயா.

மாட்டேன். நீ எத்தனை கஷ்டங்களையும், இடைஞ்சல்களையும் கொடுத்தாலும் நான் உன்னை வழிபடுவதை நிறுத்த மாட்டேன்'' என முணுமுணுப்பாக புலம்பியவள் அப்படியே கண்ணயர்ந்தாள்.

* * * * *

இரவு மணி ஒன்பதை நெருங்கிக் கொண்டிருந்த போது, தெருவில் ஒரே கூச்சலும், குழப்பமும் கேட்க ஆரம்பித்தன. பெண்கள் அங்குமிங்கும் கதறியபடி ஓடிக் கொண்டிருந்தனர். அந்தக் கதறல் சத்தம், வரதனை விழித்துக்கொள்ள வைத்தது. அப்பொழுது அவன் போதை குறைந்துவிட்டிருந்தது. வேகமாகப் படுக்கையை விட்டு எழுந்தவன் தெருவை நோக்கி ஓடினான். தெருவில் ஓடிக் கொண்டிருந்த ஒருவனை நிறுத்தி விசாரித்தான். அவன் சொன்ன வார்த்தைகள் வரதனை மின்சாரம் போல் தாக்கியது. ஒரு நிமிடம் செயலிழந்து நின்றான். பின் தன்னை சுதாரித்துக் கொண்டவன் குடிசைக்கு திரும்பி, பார்வதியை எழுப்பினான்.

''என்னங்க....'' என வேகமாக எழுந்தாள் பார்வதி. தெருவில் கேட்ட கதறல் ஓசை அவளைக் கலங்க வைத்தது. ஒன்றும் புரியாதவளாக வரதனைப் பார்த்தாள்.

''பார்வதி என்னை மன்னிச்சுடுடி....உன் புத்தியைப் பரிகாசம் செய்த எனக்கு இன்னைக்கி சரியான புத்தியைக் கொடுத்துட்டாண்டி அந்த முருகன். நீ அவன் மேலே வச்சிருந்த பக்தியும், நம்பிக்கையும் வீண் போகலேடி.....நீ அவனுக்கு சேர்த்து வைச்சிருந்த காசுதாண்டி..... இன்னைக்கி உனக்கு தாலிபாக்கியத்தையும் எனக்கு உயிர்ப்பிச்சையையும் கொடுத்திருக்கு'' என்றான் நாத்தழுதழுக்க.

''என்ன சொல்றீங்க....'' பார்வதி குழம்பியவளாகக் கேட்டாள்.

''ஆமாம் பார்வதி இன்னைக்கி இந்த உண்டியலை உடைச்சி, காசை எடுத்திட்டுப் போனதாலே பீர் குடிச்சேன். இல்லேன்னா எங்கிட்டேயிருந்த காசுக்கு சாராயம் குடிச்சிருப்பேன். அப்புறம் இன்னைக்கி சாராயம் குடிச்சவங்களோட நானும் பிணக் கொட்டகையிலே பிணமா கிடந்திருப்பேன்.... இன்னைக்கி விற்றது முழுக்க விஷச்சாராயமாண்டி....'' என்றவன் குமுறிக் குமுறி அழுதான்!

பார்வதி திக்பிரமை பிடித்துப் போய் நின்றாள். முருகனின் கருணை அவளை மெய் சிலிர்க்க வைத்தது. இருகரம் கூப்பி மண்டியிட்டு உருகினாள்.

வரதன், ''முருகா.....நான் இனிமே குடிக்க மாட்டேன்ப்பா.... இது உன் மேலே சத்தியம்ப்பா.... இன்னையிலிருந்து நானும் உன் பக்தனப்பா....'' என்றவன் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கினான். பின் மெல்ல பார்வதியை ஒரு கோழையைப் போல் ஏறிட்டான். பார்வதியும் அவனைப் பார்த்தாள். அவளின் அந்தப் பார்வையில் ஆயிரம் கேள்விகள் அடங்கிக் கிடந்தன.



---

# செல்லக்காவின் சிநேகிதன்

**மவுண்ட்ரோடில்ஓர் அந்நியநாட்டு நிறுவனத்தில் ஆயிரத்து இருநூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற,டிப்டாப்பாக உடை அணிகிற அவன்,சித்தாள் வேலைக்குப் போகும் செல்லக்காவின் குழந்தைக்குப் பிஸ்கெட் வாங்கிக் கொடுப்பது ஏனென்று ஒரு வதந்தி பரவி விடுமோ?**

ஒரே ஒருமுறை செல்லக்காவைப பஸ்ஸில் ஏற்றி அனுப்ப வேண்டுமென்று சிவநேசனுக்கு மனசு துடித்தது. பஸ் டிக்கெட் ஒரு ரூபாய்தான். இந்த ஒரு ரூபாய்க்குப் பயந்து கொண்டு, ஒரு கைப்பிள்ளைக்காரி சைதாப்பேட்டையிலிருந்து சிந்தாதிரிப்பேட்டைக்கு அன்றாடம் நடந்து போவதைப் பார்த்துப் பார்த்து அவனுக்கு மனசு மாய்ந்தது.

சில நாள் ஏழு மணிக்கே வெயில் உக்ரகலை கட்டிவிடும். சில நாட்கள் வானம் மூடிக் கொண்டு பயமுறுத்தும். சில நாட்களில் தூறல் போடத் தொடங்கும். செல்லக்காவை எதுவும் தடுத்து நிறுத்தியதில்லை.

பஸ் ஸ்டாப்புக்கருகில் ஒரு டீக்கடையில் அநேகமாக அந்த நேரத்திற்கு ஒரு டீ குடித்துக் கொண்டு நிற்பான். சைதாப்பேட்டை மாடி அறைக்கு அவன் குடி வந்த ஆரம்ப நாட்களில் பஸ் ஸ்டாப் டீக் கடையில் டீ குடிக்கிற சிவநேசனைச் சாதாரணமாக ஒரு வெற்றுப் பார்வை பார்த்துவிட்டு அவள் போவாள். நாளாவட்டத்தில் அவன் நின்று கொண்டிருந்தால் தினசரி ஒரு சின்னப் புன்னகையை அவன் மீது வீசிவிட்டுப்போவாள்.

அவள் இடுப்பில்இடுக்கி நடக்கும்குழந்தை விசுக்கென்று அவனைத் திரும்பிப் பார்த்துக் கொண்டே போகும். ஒரு வாகனமோ வேறு கவர்ச்சியோ ஈர்க்கும் வரை குழந்தையின் பார்வை அவன் மீதே தூரத்தூர பதிந்து கொண்டே செல்லும்.

இந்த நடையை அந்தக் குழந்தை ரசிக்கிறது. ஆனால் செல்லக்கா?

சிவநேசனுக்கு ஆபீஸ் மவுண்ட் ரோடில். தினசரி பஸ் பயணம். மனத்தில் வேறு எண்ணங்கள் குறுக்கிடாத ஓரிரு சமயங்கள் வரும். அப்போது அவன் ஸ்டார்ப் ஸ்டாப்பாகக் கணக்குப் போடுவான். இதைத் தாண்டி அப்புறம் இதைத் தாண்டி என்று செல்லக்கா நடந்து வருவதைக் கற்பனை செய்வான்.

சிவநேசனுக்கு நிச்சயதார்த்தம் நடந்திருந்தது. கல்யாணச் சத்திரம் கிடைக்கவில்லையென்று முகூர்த்தத்தை மூன்று மாதம் தள்ளி வைத்திருந்தார்கள். அவன் பஸ் ஏற வேண்டுமானால் மூன்று கிலோ மீட்டர் நடந்துதான் சாலைக்கு வர வேண்டிய கிராமத்திலிருந்து வந்தவன். இது கூட விஷயமில்லை.

சிவநேசனின் சைதாப்பேட்டை மாடியறையிலிருந்து பார்த்தால் ஒரு செவ்வக வடிவான காலி மனை. அதைத் தொட்டு நின்றாற்போல் செல்லக்காவின் குடிசை.

காலை ஐந்தரை மணிக்கு மசூதியிலிருந்து முல்லாவின் அல்லாஹோ அக்பர் எழுப்பி விட, அவன் வெளியே வந்தால், செல்லக்கா குடிசைப் புறக்கடையில் ஒன்று பாத்திரம் அலம்பிக்கொண்டிருப்பாள்,இல்லைகுழந்தையைக் குளிப்பாட்டிக் கொண்டிருப்பாள்.

மாடியிலிருந்து அவன் பார்ப்பான். எப்படியும் அவன் பார்வையைச் செல்லக்கா எதிரிட்டு விடுவாள். இரண்டுமே விகல்பம் இல்லாதபார்வைகள். ஒருஜீவன். இன்னொரு ஜீவன். ஒருத்தியின் பாடு. அதற்கொரு பார்வையாளரின் கசிவு.

* * * * *

கள்ளச்சாராயக் கேஸில் செல்லக்கா புருஷன் காளிமுத்துவைப் போலீஸ் தள்ளிக் கொண்டு போகும்போது சிவநேசன் ஆபீஸிலிருந்து அறைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான்.

அப்போதும் சிவநேசனை செல்லக்கா அப்படித்தான் பார்த்தாள்.கைகால்முகம்கழுவிக் கொண்டு சிவநேசன் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்விட்டான். காளிமுத்துவை ஜாமீனில் விட முடியுமா என்று வெளியே நின்ற கான்ஸ்டபிளைக் கேட்கலாமா என யோசித்த போதுதான், என்ன பைத்தியக்காரத்தனம் என்று உணர்வு வந்தது.

காளிமுத்துவுக்கு ஜாமீன் கொடுக்கத் தான் யார்? இந்த விபரீத ஆர்வத்திற்கு விளைவு என்னவாகும்?

**வையவன்**

சிவநேசன் திரும்பிவிட்டான்.

அவன் அங்கே குடிவந்து ஆறு மாதத்தில் காளிமுத்து இரண்டாவது முறையாக ஜெயிலுக்குப் போய்விட்டான்.

செல்லக்கா ஒன்றுமே நடக்காதது போல் தன் பாட்டுக்கு ஐந்தரை மணிக்கு க் குளித்துச் சமைத்து, ஒரு பித்தளைத் தூக்கு, கைப்பிள்ளை என்று ஏழு மணிக்குச் சிந்தாதிரிப்பேட்டைக்கு லொங்கு லொங்கென்று யாத்திரையை ஆரம்பித்துவிடுவாள்.

ஒருநாள் கேட்டே விட்டான்.

"எங்கே தெனம் இவ்வளவு காலேலே கௌம்பிடறே?''

''ஆங்... ஒங்களுக்கு அவசியம் சொல்லணுமோ?''

''சொல்லலேண்ணு விட்டுடு.''

முகம் அறுந்த மாதிரி அவன் தலையைத் தொங்க விட்டான்.

''சிந்தாதிரிப்பேட்டையிலே கட்டிட வேலை நடக்குது. நான் சித்தாள் வேலைக்குப் போறேன்.''

''நடந்தேவா?''

''நான் என்ன லச்சாதிபதியா, ஆட்டோவிலேயும் டாக்ஸியிலேயும் போறதுக்கு?''

''பஸ்ஸிலே போறது?''

''போக ஓர் ரூவா... வர ஓர் ரூவா... எங் கூலியே பத்துரூவாதானே... அதிலே ரெண்டு ரூவாவை பஸ்ஸுக்கு அழுதுட்டு இன்னத்தத் துன்றது?''

அன்று சிவநேசன் செல்லக்காவின் குழந்தைக்கு இரண்டு பிஸ்கெட் வாங்கிக் கொடுத்தான். அவள் அதை மறுக்கவில்லை. குழந்தை ஆவலோடு இரண்டு கைகளிலும் வாங்கிக் கொண்டது. பஸ் ஸ்டாப்பில் இரண்டு பேர் அந்தக்காட்சியைக்கவனித்ததைச்சிவநேசன் கண்டான். அடுத்தமுறைகுழந்தைக்குபிஸ்கட் வாங்கித் தரக் கூடாது என்று நிச்சயித்துக் கொண்டான்.

மவுண்ட் ரோடில் ஓர் அந்நிய நாட்டு நிறுவனத்தில் ஆயிரத்து இருநூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற, டிப்டாப்பாக உடை அணிகிற அவன், சித்தாள் வேலைக்குப் போகும் செல்லக்காவின் குழந்தைக்குப் பிஸ்கட் வாங்கிக் கொடுப்பது ஏனென்று ஒரு வதந்தி பரவி விடுமோ?வென்று சிவநேசன் சுணங்கினான்.

செல்லக்காவை ஏனோ அவனுக்குப் பிடித்தது. ஒரு பெண் பிடித்தால் அவளைப் பெண்டாள நினைக்கும் சண்டாள புத்தி நகர் உலகம் பூராவும் துருத்தி நிற்கும் போது கணக்கு இப்படித்தான் போகும் என்று எச்சரிக்கை வேண்டியிருக்கிறது.



செல்லக்கா அழகாயிருந்தாள். மற்றவர்களுக்கு அது தெரியாது. சிவநேசன் இப்படி நினைத்தான். காரணம் அவள் அழகு கண் மூக்கு உதடு என்ற அங்க அவயவப் பட்டியல் எதிலும் அடங்கவில்லை.

வேகவேகமாகச் சமைத்து, துறுதுறு வென்று ஓடியாடித்தான் குளித்து குழந்தைக்குக் குளிப்பாட்டி, வாழ்க்கை வாழ்க்கை என்று சொல்லப்படும் ஓர் ஏற்பாடு அவளுக்கு விதித்திருந்ததைத் தைரியமாகப் புன்னகையோடு, சலிப்பில்லாமல் ஒரு சிட்டுக் குருவி போல் ஏற்றுக் கொண்டு அவள் பறக்கிற பறப்பில் அந்த அழகு இருந்தது.

சில சமயம் யோசித்தால் அவளது சுறுசுறுப்பான இந்த சுயத்துவத்தின் முன் எல்லாமே அர்த்தமற்றது போலத் தோன்றும்.

அதிகாலையில் செல்லக்காவைப் பார்க்கத் தவறிவிட்டால் ஒரு நாளில் அவனுக்கு ஏதோ பின்னம் நேர்ந்த மாதிரி இருக்கும். சிவநேசனுக்கு அடிக்கடி சோம்பல் வரும். சகஜமாக எல்லோருக்கும் வருவது போல் சலிப்பும் ஏற்படும். செல்லக்காவின் சுறுசுறுப்பும், ஒரு பார்வையும், ஃப்ளாஷ் அடித்து விட்டுப் போன மாதிரி அந்த அரைப் புன்னகையும் அவனைப் புதுப்பிக்கும்.

சிவநேசனுக்கு நண்பர்கள் உண்டு. அறையில், அலுவலகத்தில் இப்படி நூதனமாகச் செல்லக்காவிடமிருந்து அவனுக்கு 'இன்ஸ்பிரேஷன்' கிடைக்கிற சங்கதியைப் பரிமாறிக் கொள்ள அவனுக்கு நாக்கு துடிக்கும். மாடியிலிருந்து குடிசையை 'ஸைட்' அடிக்கிற பயல் என்ற பட்டம்தான் மிஞ்சும் என்று அவன் விவேகம் 'பிரேக்' போட்டுவிடும்.

செல்லக்காவிடம் அவனுக்கிருந்த ஈர்ப்புக்கு என்ன முகவரி? காதல்....சீ....பாசம்... ஊஹூம்... அன்பு, பிரியம், ம்ஹூ ஹூம்... வழிபாடு.... ஏதோ கொஞ்சம் பொருந்துகிறது! தீரம், தன்மானம், பிரியம், குடிசையில் வசித்து சித்தாள் வேலை செய்தாலும் பெண்மைக்கேயுரிய லளிதம்.... இப்படி வர்ணம் வர்ணமாக இழைந்த ஒரு ஜீவ சக்தியாக செல்லக்கா தெரிந்தாள்.

அதற்குப்பின் சிவநேசன் அவள் காளிமுத்துவுக்கு வாழ்க்கைப்பட நேர்ந்த அநியாயத்திற்கு அங்கலாய்த்தான். சைதாப்பேட்டையில் ஒரு குடிசையில் அவள் வாழ்க்கை வீசியெறியப்பட்டதற்கு, அவளுடைய சித்தாள் வேலைக்கு, ஒரு பேட்டையிலிருந்து இன்னொரு பேட்டைக்கு அவள் நடக்கிற நடைக்கு.... இப்படியே, அவன் அங்கலாய்ப்பு 'ஸ்டேஜ்... ஸ்டேஜாக' அதிகரித்தது.

அப்புறம் செல்லக்காவின் அழகு சிவநேசனுக்கு ஏகமாகப் பிடிக்கத் தொடங்கியது. அவள் காளிமுத்துவின் மனைவி என்ற சிவப்பு விளக்கு அசந்தர்ப்பமாக அவனுள் அவ்வப்போது எரியும்.

''அந்த ஆளுக்கு இதான் பொயப்பு! அவரை நம்பினா ஆவறகதையில்லே ஆயா...! பொம்மனாட்டியா ஜன்மம் எடுத்தாச்சு. ஏதோ

## மேடையேறிய அனுபவம்



போட்டி: 9

நீங்கள் எப்போதாவது மேடை ஏறிப் பேச வேண்டிய அனுபவம் ஏற்பட்டிருக்கலாம். அப்போது உங்கள் மனநிலை, சமாளித்த விதம் பற்றி எழுதுங்கள். கீழே வெற்றிடத்தில் எழுத வேண்டும். இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பும்போது உறையின் மேல் ''மேடை ஏறிய அனுபவம்'' என்று அவசியம் குறிப்பிடவும். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு வி. ஐ. பி. ஸூட்கேஸ்!

முடிவு தேதி: 15.7.85

**44 விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்கள் கல்கி வாசகர்களின் இல்லங்களுக்குப் போய்ச்சேரக் காத்திருக்கின்றன. வாரம் தவறாமல் போட்டியில் பங்கு பெறவும்.**

என் பெயர்: ..........................................................

விலாசம்: ..........................................................

..........................................................

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

வருகை தாரீர்!

# விஜிபி - யின்

# வாழுங்கள் வசதியாக

## கண்காட்சி

சென்னையில் சொநதமாக வீட்டுமனை வாங்க ஓர் அரிய வாய்ப்பு!

உங்கள் தேவைக்கேற்ற கடற்கரையோர மனைகள், தொழிற்-சாலைக்கேற்ற மனைகள்.

குடியிருப்போருக்கென மனைகள் மேடவாக்கம். தாம்பரம், ஸ்ரீபெரும்புதூர், படப்பை, கூடுவாஞ்சேரி மற்றும் பல இடங்கள்.

பல மாதிரி வீடுகள் நீங்கள் விரும்பும் வண்ணம் உங்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது.

முன்பணம் 25 சதவீதம் செலுத்தி மீதம் 24 சுலபத் தவணைகளில் பெறலாம்.

வீடு கட்ட கடன் வழங்கும் வங்கிகளில் கடன்வசதி ஏற்பாடு.




SOBHAGYA

மற்றும் இக்கண்காட்சி விஜிபி ஷோரூம், ரத்தன் பஜார், சென்னை-3-ல் நடைபெறுகிறது. போன்: 39649.

கையும்காலும்பகவான் நல்லபடியா வச்சிருக்கான்! உண்டான தொயிலைப் பண்ணி வவுத்தைக் கயுவி புள்ளைய வளக்க வேண்டியது தானே!''

ஒரு நாள் இடியாப்பம் விற்கும் கிழவியுடன் செல்லக்கா கலந்துரையாடிக் கொண்டிருந்தாள்.

''இருந்தாலும் தம்மாம் வயசிலே ஒனக்கு இந்தினி தெகிரியம் இருக்குதேடி அம்மா!''

''இது இன்னு தெகிரியம் ஆயா! நாம இன்னு ராஜ்யத்தையா ஆள்றோம். கைய ஒடச்சி கஞ்சி குடிக்கிறோம்.''

''புருஷங்காரன் ஜெயிலுக்குப் பூட்டானே.''

''அதுக்கு நாம இன்னு பண்றது! கொண்டு இருந்தற அம்புட்டு திருத்திறோம். பயபடி கயனிப் பானேக்கே புத்தி போனு நாமனும் இன்னு பண்றது? ஐயா விருந்தாளி கணக்கா வருவாரு, போவாரு. சம்சாரத்தை நடத்தியா வனுமே! நானும் கன்னத்திலே கைய வச்சி குந்திக்கினு நாளு நடந்திடுமா....''

காளிமுத்துவல்ல வேறு எந்தக் கொம்பனும் செல்லக்காவின் உயிரில் ஓடும் மின்சாரத்தைக் கட்டுப்படுத்திவிட முடியாது என்று சிவநேசன் புரிந்து கொண்டான். இந்த உழைப்பின் கம்பீரமே செல்லக்காவுக்கு ஒரு வேலி கட்டிற்று.

யார் இந்தச் செல்லக்கா?

ஆதி மனுஷியா? பொறுப்பில்லாத பலவீனம் நிறைந்த, தொட்டால் பிதிர்ந்து விடுகிற சுயநலம் என்ற ஒரு வட்டம் தவிர மறு வட்டமறியாத ஆண்குலத்திற்கு என்றென்றைக்கும் மௌனச் சவாலாக இருக்கும் ஒரு சக்தியா? சுழலும் உலகின் அச்சு இவள் மாதிரி சுமை தூக்கித் திரியும் ஜீவ இயக்கத்தில்தான் சுற்றுகிறதா?

எது எப்படியானாலும் கால் கடுக்கக் கடுக்கச் செல்லக்கா நடப்பதை அவனால் தாங்க முடியவில்லை. ஒருநாள் அவளை பஸ்ஸில் ஏற்றி அனுப்பினால்தான் அவன் மனசுக்கு கொஞ்சமாவது சாந்திகிட்டும் போலிருந்தது.

அன்று காலை பஸ் ஸ்டாப்பில் அவன் டீ குடிக்கிற சமயத்தில் அவள் எதிர்ப்பட்டாள்.

''இந்தாம்மா ஒரு நிமிஷம்....''

அவள் பித்தளைத் தூக்கோடு நின்றாள். நடை வேகத்தில் இன்னும் தூக்கு ஆடிற்று.

''இன்னிக்கு ஒருநாள் பஸ்ஸிலே போய்த் தான் வாயேன்....''

''ரெண்டு ரூவா நீ கொடுப்பியா சாரு?''

கேட்பாள் என்று காத்திருந்தவன் போல் ஓர் இரண்டு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினான்.

நோட்டையும் அவனையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு அவள் சொன்னாள்.

''வாணாம் சாரு..... இன்னிக்கு நீ குடுத்த துட்டை வாங்கினு பஸ் ஏறிப் பூடுவேன். நாளைக்கி? இன்னிக்கி பஸ்ல போன சொகத்தை நெனச்சி நான் ஏங்கனும்... நெதப்படி நடக்கிற நடையில ஒரு சுனு போயி பனு வந்துடும்.... நமக்கு நடைதான் எய்திருக்கு.... வரட்டா?''

அவள் அரைப் புன்னகைக்குப் பதில் முழுப் புன்னகை வீசிவிட்டு நடையைப் போட்டாள். இதுதான், இப்போதுதான் இவள் பரிபூரணமான செல்லக்கா என்று சிவநேசனுக்குள் ஒரு சிலிர்ப்பு பரவிற்று. அந்த முழுப் புன்னகை? அது சிவநேசனுக்கல்ல. மாசற்ற ஒரு சிநேகிதத்துக்கு.

* * * * *

---

''உங்களுக்கு 12 குழந்தைகள்னு சொல்றீங்களே, கு. க. பிரசாரம் செய்யறவங்க உங்க வீட்டுப் பக்கம் எப்பவும் வரலையா?''

''வந்தாங்க! ஆனா எங்க வீட்டைப் பார்த்துட்டு இது ஏதோ 'பேபி கேர்' சென்டர் போலிருக்குன்னு நினைச்சுப் பேசாமே போயிட்டாங்க!''



---



மனைவி: எந்த ஒரு விஷயத்திலும் நீங்க என்னோட ஒத்துப் போக மாட்டேங்கறீங்களே? வாழ்க்கைங்கிற வண்டிக்குக் கணவனும் மனைவியும் இரண்டு சக்கரங்களைப் போல என்கிறதைத் தெரிஞ்சுக்குங்க!

கணவன்: அது சரி! ஆனா நம்ம வண்டிக்கு ஒண்ணு சைக்கிள் சக்கரமும் மற்றது டிராக்டர் சக்கரமுமாக அமைஞ்சுத் தொலைச்சிருக்கே?

# அவள் சாகத்தான் வேண்டும்

என். பாலகிருஷ்ணன்



ஸீவரைக்கிழே வைத்த சதீஷின் முகத்தில் ஆயிரம் வாட் பல்ப் ஒளிர்ந்தது.

''என்ன பாஸ், இன்னிக்கு உங்க முகத்திலே வழக்கமான எண்ணெய்க்குப் பதிலாப் பிரகாசம் வழியறது?''

''பிரபு, இன்னிக்கு என்னுடைய லட்சியம் ஈடேறப் போகுது.''

''என்ன பாஸ் சொல்றீங்க?''

''நடிகை அனுஜா இன்னிக்குச் சாயந்தரம் பிணமாகப் போறா!''

''உங்க பார்வை அவ பக்கம் எப்படி பாஸ் திரும்புச்சு.....?''

''எனக்கு விவரம் தெரிஞ்ச நாளிலே இருந்து என்னுடைய பார்வை அவ மேலே தாண்டா இருக்கு. அவ பார்வைதான் என்னை விட்டு விலகிடிச்சு.... என்னுடைய சொந்த அத்தை பொண்ணு கமலா. என் மேலே உயிரையே வைச்சிருந்தா. பிரபல டைரக்டர் போத்திராஜ் என்னுடைய கமலாவை அனுஜா வாக்கித் தன்னுடைய படத்திலே நடிக்க வைச்சான். படம் ஓஹோன்னு ஓடிச்சு.... அனுஜா பிஸி ஆர்ட்டிஸ்டானா.... எங்க ரெண்டு பேத்துக்கும் இடைவெளி பெருகி என்னை 'என் மூஞ்சியிலே முழிக்காதே'ன்னா. 'எனக்கு கிடைக்காத நீ யாருக்கும் கிடைக்க விட மாட்டேன்'னேன். 'முடிஞ்சாப் பார்த்துக்கோ'ன்னா. இன்னிக்கு அவ வாழ்க்கையோட கடைசி நாள்.... இன்னிக்குச் சாயந்தரம் அஞ்சரை மணிக்கு டைரக்டர் போத்திராஜ் தரப்போற விருந்திலே அனுஜா கலந்துக்கப் போறான்னு அவ வீட்டு வேலைக்காரியான என் கையாள் அஞ்சலை இப்ப ஃபோன் பண்ணினா.... அந்த விருந்து அவளோட கடைசி விருந்தா இருக்கணும்!''

''அவளை நம்பி சினிஃபீல்டிலே லட்சக் கணக்கான ரூபாய் முடங்கியிருக்கு பாஸ்!''

''அதைப்பற்றி எனக்கென்ன.... அவ இன்னிக்குச் சாகணும். நாளைக்கு வரப்போற தமிழ் பேப்பர் அத்தனையிலும் அவளோட வாழ்க்கை வரலாறு இடம் பெறணும்!''

''எப்பவும் இந்த கு: பிடிவாதம்தான்.... அவளை மறந்துட்டுப் பேசாம வேற யாரை யாவது கல்யாணம் பண்ணிக்கக் கூடாதா?''

''அதை பிறகு பார்க்கலாம்.... இன்னிக்கு அவ செத்தே ஆகணும்!''

''ஓ. கே... அவளை எப்படிக் கொலை பண்ணணும்?''

''அவளோட அம்பாஸடர் காரிலே டைம் பாம் வச்சு!''

''கார் நம்பர்....?''

''TMN 2424.''

''டைம்பாம் எத்தனை மணிக்கு வெடிக்கணும்?''

''அனுஜா அஞ்சரையிலிருந்து ஆறு வரைக்கும் டைரக்டர் போத்திராஜ் தர்ற விருந்திலே கலந்துக்கறா. ஆறு மணிக்கு அங்கேயிருந்து கிளம்பி வீட்டுக்கு வந்து ட்ரெஸ் சேஞ்ச் பண்ணிக்கிட்டுத் தேவி பாரடைஸிலே படம் பார்க்கப் போறா. ஸோ.... டைம் பாம் ஆறு பத்துக்கு வெடிக்கிற மாதிரி செட் பண்ணினா அவ வீட்டுக்கு வர்ற வழியிலே காரோட சிதறிப் பிணமாயிடுவா!''

''கச்சிதமா முடிச்சா என்ன பாஸ் தருவீங்க?''

''கேரளத்துக் குட்டி அனிதா. ப்ளஸ் பத்தாயிரம் ரூபாய்!''

''தாங்க் யூ பாஸ்!''

* * * * *

மாலை மணி 5.20!

வானத்துத் தாரகையாய் மாடிப்படிகளில் துள்ளிக் குதித்து இறங்கிய அனுஜா அஞ்சலையைக் கண்டதும், ''அஞ்சலை! நான் டைரக்டர் போத்திராஜ் தர்ற பார்ட்டியிலே கலந்துக்கிட்டு ஆறு மணிக்கு அங்கேயிருந்து கிளம்பி ஆறே காலுக்குள்ளாற வீட்டுக்கு வந்திடுவேன். ஸூப்பர் ஸ்டார் அருண் என்னைத் தேடி பெங்களூரிலிருந்து சாயந்தரம் ஆறு மணிக்கு இங்கே வருவார். அம்மா கொஞ்ச நேரத்திலே வந்திடுவாங்கன்னு சொல்லி அவரை உட்கார வை. போரடிக்குதுன்னு சொன்னார்ன்னா ஃப்ரிஜ்லேர்ந்து ஒரு ராயல் ஸல்யூட் எடுத்துக் கொடு. நான் வந்ததும் அவரும் நானும் தேவி பாரடைஸிலே சினிமாவுக்குப் போகணும்!'' என்றாள்.

''சரிங்கம்மா. ஏதாச்சும் தயார் பண்ணி வைக்கணுமா?''

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். அருணை மட்டும் நல்லாக் கவனிச்சுக்கோ!'' என்றவள் 'ட்ரைவர்....' என்று கூவியவாறே போர்டிகோவை நோக்கித் துள்ளிச் சென்றபோது நீண்ட பெருமூச்சை வெளியிட்டாள் அஞ்சலை.

* * * * *

அவன்: என் காதலர் ஒரு சந்தேகப் பேர்வழி.
இவள்: ஏண்டி இப்படிச் சொல்லறே?
அவள்: சாதாரணமாக மாங்காய் வாங்கிக் கொடுங்க என்றால் கூடப் போதும் பயந்து போய் லேடி டாக்டர் கிட்டே கூட்டிக் கொண்டு போயிடுறார்!

—லலிதா செல்லப்பா.



மணி 5.55!

அனிதாவின் இதழ்களில் அழுத்தமாய் முத்தமிட்டு எழுந்தான் சதீஷ்.

''இன்னும் கொஞ்ச நேரம் இருந்திட்டுப் போகக்கூடாதா....?'' கொஞ்சினாள் அனிதா.

''நாளைக்கி வர்றேன், டார்லிங்!''

''இன்னிக்கு அப்படியென்ன முக்கியமான காரியம்....?''

''ஒரு சந்தோஷமான சமாசாரத்தை எதிர் பார்த்துப் போய்ட்டிருக்கேன்....!''

''நான் கட்டின மனைவியா இருந்தா இப்படி விட்டுட்டு ஓடுவீங்களா....?''

பதிலுக்குப்புன்சிரிப்பைச் சிந்திய சதீஷ் புத்தம் புதிய நூறு ரூபாய் நோட்டு ஒன்றை அவளது உடலின் மீது வீசிவிட்டு வெளியேறினான்.

* * * * *

மணி 6.00!

'கற்பனையில்மிதந்தவாறே காரைச்செலுத்திக் கொண்டிருந்தான் சதீஷ்.

'மை டியர் அனுஜா! இன்னும் பத்து.... பத்தே நிமிஷம். காரோடு நீ தூள் தூள்.... உன் அருமைக் காதலன் ஸூப்பர் ஸ்டார் அருண் உன்னை இழந்து அனலில் விழுந்த புழுவாய்த் துடிக்கப் போகிறான். பணம் வந்ததும் பாசத்தை மறந்த உனக்கு இதுதான் தகுந்த முடிவு....'

கற்பனையில்மிதந்தவனின் காரின் குறுக்கே எருமை மாடொன்று பாய......

நிலைகொள்ள இயலாமல் சதீஷ் ஸ்டியரிங்கை ஒடிக்க......

சாலை ஓரத்துப் புளிய மரத்தைக் கார் திடீரென அணைக்க.....

'அய்யோ..... அம்மா.....!'

* * * * * *

மணி 6.05!

''ட்ரைவர்! கொஞ்சம் காரை நிறுத்துங்க.. ஏதோ ஆக்ஸிடெண்ட்!''

ட்ரைவர் காரை நிறுத்தியதும், கதவைத் திறந்து கொண்டு புளிய மரத்தை நோக்கி விரைந்தாள் அனுஜா.

காருக்குள் தலையிலும், வாயிலும் ரத்தம் ஒழுகக் கிடந்த சதீஷைக் கண்டதும், ''சதீஷ்...'' என்று அலறியவள் பதற்றமுடன் அவன் மூக்கில் கை வைத்துப் பார்த்த போது, அவள் இதழில் இலேசான இளநகை கோடிட்டது.

''ட்ரைவர்! மூச்சிருக்கு..... கொஞ்சம் பிடிங்க, நம்ம காரிலே போட்டு ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனா பிழைக்க வைச்சுடலாம்!''

''அங்கே பாருங்க!'' டிரைவர் சொல்லிக் கூட முடிக்கவில்லை.

'படார்....' கண்ணைப் பறிக்கும் ஜ்வாலையுடன் பற்றி எரிந்தது TMN 2424.

அனுஜா விவரம் புரியாமல் விழித்துக் கொண்டிருந்தாள்!

# ரேடியோ உலகில் புரட்சி படைக்கும் புதுமையாளர்கள்



# PAMAN

# பமன்

## டிரான்சிஸ்டர் ரேடியோக்கள். டேப் ரிக்கார்டர்கள்

## டூ-இன்-ஒன்ஸ்

புறத்தில் அழகும் - அகத்தில் இனிமையும் கொண்டது - பமன்

அகில உலக நடப்புகளை அறிய உதவுபவை பமன் டிரான்சிஸ்டர் ரேடியோக்கள்.

பமனை இயக்குங்கள். ஒலி உலகோடு உங்களுக்குத் தொடர்பு கிடைக்கும். எல்லை எதுவும் இல்லாத ஒலித் தெளிவு, இன்றைக் கெல்லாம் ரேடியோவைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அத்தனை அழகு. பாட்டோ பேச்சோ கேட்டு மகிழ அரிய வாய்ப்பு.

பமன் 1-அப், பமன் பாட்ஸ்மேன், பமன் பிரீத், பமன் பெர்ல், பமன் காஸ்மாஸ், பமன் வீனஸ், பமன் சேடக் எனப் பல ரகங்கள்.

துல்லியமாக டியூன் செய்வதற்கும், பிசிறு எதுவும் இல்லாத கணீரென்ற தெளிவான ஒலி பெறவும் வசதியான நவீன சர்க்யூட்டர் அமைப்பு. எல் இ டி டியூனிங் இண்டிக்கேட்டர் மற்றும் பாட்டரி இண்டிக்கேட்டர் ஆகியவற்றுடன் கூடியது.

இண்டர்நேஷனல் சர்க்யூட் ஸ்டாண்டர்ட்களுக்கு ஏற்பத் தயாரிக்கப்படுவதால் பமன் செட்டுகள் பாட்டரிகளுக்கு நீண்டகால இயக்க சக்தி அளிக்கின்றன.

## பமனை இயக்குங்கள் உலகத் தொடர்பு பெறுங்கள் !

## பமன் பராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்

ஜி ஜி காம்ப்ளெக்ஸ்
42/21, அண்ணா சாலை,
சென்னை-600 002,







Adept-M/P/102

# செய்திகள் வாசிப்பது

**ம**றுபடியும் சென்னை புறநகர்ப் பகுதியில் முகமூடிக் கொள்ளை என்பதைப் படித்ததும் எனக்கு இரண்டு விஷயங்கள் நினைவு வந்தன. ஒன்று முகமூடிக் கொள்ளையரைப் பிடிப்பதற்காகத் தாழப் பறக்கும் விமானங்கள் சிலவற்றைத் தமிழக அரசு வாங்கும் என்று எம். ஜி. ஆர். சில காலம் முன்பு கூறியது. மற்றொன்று, தமிழக அரசிடம் ஏற்கெனவே உள்ள ஹெலிகாப்டரையும் செயற்கை மழை உருவாக்கப் பயன்படுத்தப்படும் விமானத்தையும் பராமரிக்கும் செலவுகளைத் தமிழக அரசு காலாகாலத்தில் செலுத்தாததால் சென்னை ஃப்ளையிங் கிளப் மூடுவிழா நடத்த உத்தேசித்திருந்தது.

* * * * *

இந்தியாவில் எல்லாத் துறைகளிலும் தரக் குறைவு ஏற்பட்டுவிட்டது. லஞ்ச ஊழலும் மலிந்துவிட்டது. நீதித்துறை ஒன்றுதான் அடியோடு கெட்டுப்போகாமல் எஞ்சி இருக்கிறது என்று பேசப்படுவதுண்டு. நீதித் துறை குறித்தும் நம்பிக்கை இழக்க ஆரம்பித்திருக்கும் சிலர் சமீபத்திய ஒரு இடைக்காலத் தீர்ப்பைப் படித்துத் தெம்பு பெறலாம். கர்நாடகா வங்கி அதிகாரி ஞானசம்பந்தம் சிலகாலம் முன்பு கொலை செய்யப்பட்டு பாங்கும் கொள்ளையடிக்கப்பட்டது நினைவிருக்கும். அவர் ஆபீஸ் நேரம் கடந்து கடமையாற்றிக் கொண்டிருந்தார் என்றும் அது அவர் தவறுதானேயொழிய தன் பொறுப்பு இல்லை என்றும் வங்கி நிர்வாகம் வாதாடியது. அதனால் நஷ்ட ஈடு தொகையை மிகக் குறைந்த பட்சமாகப் பதினையாயிரம் என்று நிர்ணயித்தது. காரியாலய நேரம் கடந்து பணியாற்றிக் கொண்டிருந்தது ஞானசம்பந்தத்தின் கடமை உணர்வையும் விசுவாசத்தையும் காட்டுவதாக ஏனோ வங்கி எண்ணிப் பார்க்கவில்லை. நீதிபதி திரு. எஸ். நடராஜன் நியாயமான கோபத்துடன் பேசியிருக்கிறார். விதிமுறைகளை மட்டுமே பார்த்து பாங்கு இவ்வாறு வாதாடுவது முறையல்ல என்றும் மனிதாபிமான நோக்கு தேவை என்றும் கூறி முதல் கட்டமாக இரண்டு லட்சம் டெபாஸிட் செய்யுமாறும் (இதன் வட்டி இறந்தவரின் மனைவிக்குக் கிடைத்து வரும்). பிறகு வழக்கு விசாரணை தொடரலாம் என்றும் கூறியிருக்கிறார். இதைப் படிக்கும்போது, அடடே, இந்தியாவில் கூட வாய்மை வெல்லும் போலிருக்கிறதே என்ற நம்பிக்கை பிறக்கத்தான் செய்கிறது.

* * * * *

இயக்குநர் ஆர். ஸி. சக்தியின் யூனிட், பெங்களூர் சென்ட்ரல் ஜெயிலில் படப்பிடிப்பை முடித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருக்கையில் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன்.

'ஏன் ஜெயில் காட்சிகளை சென்னை மத்திய சிறையிலேயே எடுத்திருக்கலாமே?'

'இப்போது சென்னை மத்திய சிறையில் ஷூட்டிங்குக்கு அனுமதிப்பதில்லையாம்.'

'என்ன! கைதியின் டயரி அங்கேதானே எடுக்கப்பட்டது!'

'ஆமாம். அதன் பிறகுதான் அனுமதிப்பதில்லை' என்றவர் காரணத்தை விளக்கினார்:

ஷூட்டிங்கின்போது படப்பிடிப்புக் குழுவினர் எல்லோருக்கும் ஒரு டோக்கன் கொடுப்பார்கள். வெளியே வரும்போது அதைக் காட்ட வேண்டும். ஆனால் கைதியின் டயரி யூனிட்டில் இரண்டு மூன்று பேர் டோக்கனைத் தொலைத்துவிட அவை கைதிகளிடம் சிக்கி இரண்டு கைதிகள் தப்பிவிட்டார்கள்! இதன் பலன்தான் பெங்களூர் ஷூட்டிங்!

ஏன் பெங்களூரில் இதே போன்ற பிரச்னை வராதா?

ஊஹூம். பெங்களூரில் டோக்கன் தருவது தவிர ஒரு முத்திரையையும் கையில் குத்தி விடுகிறார்கள். இரண்டையும் காட்டி விட்டுத்தான் வெளியேற வேண்டும்!

* * * * *






# செம்பியன்



ராஜீவின் ருஷ்ய விஜயத்தின்போது 23 பத்திரிகையாளர்கள் பின்னேடுபோனார்கள். ஆனால் யூ. என். ஐ. செய்தி ஸ்தாபனத்தின் சார்பில் ஒரு நிருபர் கூடப் போக முடியவில்லை! காரணம்? ராஜீவுக்கு யூ. என். ஐ. மீது கோபமாம். எதற்காக? புதுதில்லியில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் மே 4ம் தேதி ராஜீவ் பேசினார். அந்தப் பேச்சை அப்படியே பிரசுரத்துக்கு அனுப்பாமல் யூ. என். ஐ. நிருபர் ஒருவர் ராஜீவ் என்ன சொல்ல வருகிறார், எதைக் குறிப்பிடுகிறார் என்று அதன் உள் அர்த்தத்தை விளக்கி எழுதினாராம். இது ராஜீவுக்குப் பிடிக்கவில்லையாம். யூ. என். ஐ. நிறுவனத்துக்கு ஒரு பாடம் புகட்ட எண்ணி ருஷ்யாவுக்கு அதன் சார்பில் நிருபரை அழைத்துப் போகாமல் இருந்துவிட்டார்! ராஜீவே செய்தாரோ அல்லது ராஜீவைத் திருப்திப்படுத்த எண்ணிய அதிகாரிகள் செய்தார்களோ, எவ்வாறாயினும் இந்தச் சின்னத்தனம் அரசுக்கு அழகல்ல. சிலகாலம் முன் இலங்கையில் நமது பி. டி. ஐ. நிருபர், ஜெயவர்த்தன பேச்சின் உள்ளர்த்தத்தை விளக்கமுற்பட, கோபமுற்ற இலங்கை அதிபர் அவரைக் கைது செய்தார். இது அநீதி என்று எத்தனை உரக்கக் குரல் எழுப்பினேம் நாம்!

* * * * *




சென்னையில் உடல்களைப் புதைக்கக் கூடாது எரிக்கத்தான் வேண்டும் என்று அதிகார வர்க்கம் உத்தரவு போட்டுவிட்டது. காரணம் இறந்தவர்களைப் புதைப்பது எனில் ஏராளமான நிலம் இடுகாடுகளாகிப் போகிறதாம். விவசாயத்திற்கும், தொழிலகங்களுக்கும் நிலம் தேவைப்படும்போது நிலத்தை இடுகாடுகளாக்கி "வீணடிக்க" அந்த அரசு விரும்பவில்லை. இறந்த உடல்களைப் புதைத்தால் தண்டனை. எரியூட்டி, வேண்டுமானால் பிடிசாம்பலைக் கொண்டுபோய் என்னமோ செய்து கொள்ளுங்கள் என்கிறது. லேட்ஸ் ஆன் பாணியில் கூறுவதானால் **Practical people!**

* * * * *

திருமதி இந்திரா காந்தியின் உயிலைப் பற்றி நாளிதழ்களில் படித்துக் கரைந்து உருகியவர்கள் பலர். உயிலின் அடிப்படையில் கல்கத்தா ஸ்டேட்ஸ்மன் பத்திரிகை ஓர் ஆய்வு நடத்தியது. அதன்படி: இந்திராவின் சொத்தின் மதிப்பு 21.7 லட்சம். இதில் வீடு, நிலம் வகையறா 12.3 லட்சம். கம்பெனி பங்குகள் டிபென்சர்கள், நகைகள், பாங்கில் பணம் வகையறா 9.4 லட்சம். இவை தவிர பாரத் ஸ்டீல் டியூப்ஸ் நிறுவனத்தில் மட்டுமே அவருக்கு 29.1 லட்சத்துக்கு டிபன்சர்கள் இருந்தன. ஆனந்த பவன் உள்பட அனைத்தையும் நாட்டுக்கே அர்ப்பணித்துவிட்ட நேரு குடும்பத்தின் வாரிசு இந்திரா காந்தியின் சொத்து மதிப்பு இது. விந்தைதான்! ஒரே நிறுவனத்தில் சுமார் முப்பது லட்சம் மதிப்புள்ள டிபன்சர்கள் அவர் வைத்திருந்தது விந்தையிலும் விந்தை!

* * * * *



இந்தியாவுக்குள் தங்கம் கள்ளக்கடத்தலில் வருவது நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இவ்வாண்டு மே முடிய 1000 கிலோ கிராமுக்கு அதிகமாகவே தங்கம் கள்ளத்தனமாக உட்புகுந்து இருப்பதாகக் கருதப்படுகிறது. ஆனால் சென்ற ஆண்டு முழுவதிலுமே 515 கிலோ கிராம்தான் கள்ளக் கடத்தலில் வந்தது. ஏன் இந்தத் திடீர் உயர்வு? கல்யாணங்கள் போன வருஷத்தை விட அதிகமாக நடப்பதாகக் கூற முடியாது. பின்னர்? சில அரசியல் காரணங்களுக்காக வருவதாகச் சொல்கிறார்கள்! ஒருவேளை அடுத்த தேர்தலை முன்னிட்டும் சொந்த நலனை முன்னிட்டும் கறுப்புப் பணம் ஏராளமாக வைத்திருக்கும், சேகரித்து வரும் அரசியல்வாதிகள் ரூபாயின் மதிப்பு நாளுக்கு நாள் குறைவதால் தங்கமாக வாங்கி வைத்துக் கொள்ள முடிவு செய்திருக்கிறார்களோ என்னமோ!

* * * * *

# ஓய்வெடுக்கத் தெரியுமா?

இனிய நண்பனே !

உனக்கு ஓய்வெடுக்கத் தெரியுமா ?

ஓய்வு என்பது உறக்கமன்று.

ஒரு தலையணையைத் தலைக்கடியிலும் ஒரு தலையணையைக் கால்களின் இடுக்கிலும் இட்டுக் கொண்டு கண்மூடிக் கிடப்பதன்று.

ஓய்வு என்பது உனது புலன்களைப் புதுப்பிக்கும் ஏற்பாடு.

சோம்பேறிகளின் சொர்க்கத்தில் ஓய்வு என்பது சும்மாயிருப்பது.

உல்லாசவாசிகளின் அகராதியில் ஓய்வு என்பது புலன்களைக் கிளர்ச்சிகளின் கிடங்கில் கிடத்துவது.

ஓய்வு என்பது புலன்களை மறக்கடிப்பதல்ல; புதுப்பிப்பது.

'புலன்களை மறக்கடிப்பதே ஓய்வு' என்னும் ஆபத்தான விளக்கத்தை நாம் அங்கீகரித்து விட்டதால் நம் இளைஞர்களில் பெரும்பாலோர் திரையரங்குகளை வாடகைக்கு எடுத்துக் கொண்டு வசிக்க ஆரம்பித்துவிடுகிறார்கள்.

சிலர் தமக்குத்தாமே மது என்னும் திரவத் தீயை வைத்துக் கொள்கிறார்கள்.

சிலரது யாத்திரைகள் மாத்திரைகளில் நடந்து கொண்டிருக்கின்றன.

சிலர் உறக்கம் என்னும் செயற்கைக் கல்லறைக்குள் பல மணி நேரம் இறந்து கிடக்கிறார்கள்.

ஓய்வு என்பது புலன்களை மறக்கடிப்பதல்ல, புதுப்பிப்பது என்ற கருத்துக்கு நாம் காது கொடுத்தால் நமது வாழ்க்கையின் ஒரு பகுதியே நிறம் மாறிவிடும்.

இளைஞனே ! நீ ஓய்வு என்பதை உனது அடுத்தகட்டப் போரின் ஆயத்தத்திற்கான அவகாசம் என்று அறிந்து கொள்.

வானத்தின் நீலத்தைப் பார்.

உனது கண்ணுக்குள் வானத்தின் நீலத்தை வாங்கு.

தாவரப் பச்சையைவிட சுகமான பச்சை இந்தப் பிரபஞ்சத்தில் இல்லை.

மரஞ்செடி கொடிகளை சிநேகித்து அவற்றின் பசுமையை நெஞ்சுக்குள் பரப்பு.

பூக்களை வசியப்படுத்து.

அவற்றின் இளமையெல்லாம் உன் இதயத்திற்கு வரவேண்டுமென்று எண்ணமிடு.

இமைத்திரைகளை விலக்கிவிட்டு உன் மனசை ஒரு மெல்லிய மேகமாய் மிதக்கவிடு.

உன்னைக் கடந்துபோகும் தென்றலைப் பார்த்து ஓடாதே என்று உத்தரவு போடு.

உன்னை வருடிக் கொடுக்கும் தென்றலை நீ வருடிக் கொடுத்து உற்சாகமாய்க் கொஞ்ச நேரம் உரையாடிக் கொண்டிரு.

இந்த பூமியே இசையால் நிரப்பி வைக்கப்பட்ட கிண்ணம்தான்.

நாம் வாழும் பூமியே ஒரு நடனசாலை தான்.

காற்றில் அசையும் தென்னங்கீற்றின் ஒலியில் கதியிருக்கிறது.

அது ஆடும் வேகத்தில் ஒரு ஜதியிருக்கிறது.

வாழ்ந்து கெட்ட ஒருவன் தானம் கேட்கப் போகும்போது தயங்கித் தயங்கிப்



புகைப்படம்:

போவது மாதிரி மேகங்கள் சோக நடை போடுவதை நீ கவனித்திருக்கிறாயா ?

ஒவ்வோர் உதயமும், ஒவ்வோர் அஸ்தமனமும், ஒவ்வொரு பௌர்ணமியும் லட்சம் கிலோவாட் மின்சக்தியை உன் மனசுக்குள் உற்பத்தி செய்யக் கூடியவை என்று நான் உணர்ந்திருக்கிறேனே ....! உனக்கு எப்படி ?

சின்னச் சின்னத் தோல்விகளால் மனிதன் களைத்துப் போகிறான்.

அந்தக் களைப்பை நீக்கும் களிம்புதான் ஓய்வு.

மீண்டும் சொல்கிறேன் ஓய்வு என்பது புலன்களை மறக்கடிப்பதல்ல; புதுப்பிப்பது.

**கவிஞர் வைரமுத்து**



• பாரிசில் யுனெஸ்கோ பிரதம இயக்குனருடன்...

# அமெரிக்காவில் ராஜீவ்

உலகக் கோப்பையை வென்ற போது அதை டி. வி. யில் பார்த்து மெய்சிலிர்த்தோம் என்றால், உலகையே வென்று விட்டது போன்ற மகிழ்ச்சி ஏற்பட்டது ராஜீவ் காந்தி அமெரிக்கப் பத்திரிகையாளரைச் சந்தித்த நிகழ்ச்சியை டி. வி. யில் பார்த்தபோது!

ராஜீவுக்கு முன்னதாக சீக்கியத் தீவிரவாதி தில்லானை அமெரிக்க தேசிய பிரஸ் கிளப்பேச அழைத்திருந்ததால் ராஜீவ் இந்தப் பத்திரிகையாளர் சங்கத்தின் அழைப்பை ஏற்க மறுத்து விடலாம் என்று முன்னதாக வந்த செய்தி, நல்லவேளை, பொய்த்துப் போயிற்று. ''தில்லானைப் போன்ற மனிதர்களால் பாதிக்கப்படக் கூடியவன் அல்ல நான்'' என்ற சரியான பதிலை அளித்த ராஜீவ், அமெரிக்கப் பத்திரிகையாளரின் கேள்விக் கணைகளைச் சந்தித்த விதம் அவரையும் இந்தியாவையும் உலகின் மதிப்பில் வெகுவாக உயர்த்தியுள்ளது.

அவரது பதில்களில் ஒளிவு மறைவில்லை; மெலிதான நகைச்சுவை இழையோடியது.

அச்சமோ தயக்கமோ இல்லை, தன்னம்பிக்கை தொனித்தது; ரேகனையோ அல்லது அமெரிக்க அரசையோ திருப்திப்படுத்த வேண்டும் என்ற நோக்கில் பேசாமல் தமக்கு சத்தியம் என்று தோன்றியதைச் சொன்னார்.

அண்டை நாடுகளிடமும், வல்லரசுகளிடமும் நட்புறவை பலப்படுத்த வேண்டும்; ஆனால் அதற்காக நமது நம்பிக்கைகளை விட்டுக் கொடுக்க வேண்டியதில்லை என்ற உறுதி அவர் பதில்களில் இருந்தது. இதனாலேயே கருத்துச் சுதந்திரத்தைக் கண்ணே போல் காக்கும் அமெரிக்காவில் அவர் மிகுந்த பாராட்டுதல்களுக்கு உள்ளாகியிருக்கிறார். அமெரிக்க நாடாளுமன்றத்தில் பேச அவருக்கு வாய்ப்பளிக்கப்பட்டதானது ஒரு பெரிய கௌரவம். அமெரிக்காவுக்கு விஜயம் செய்யும் பிற தேசத்துத் தலைவர்கள் எல்லாருக்கும் கிடைத்து விடக் கூடியது அல்ல. அப்போதும் சரி, ரேகனுடன் நடத்திய பேச்சு வார்த்தைகளின் போதும் சரி, ராஜீவின் வாக்கில் உண்மை ஒளி இருந்திருக்கிறது.

ராஜீவின் இந்த அமெரிக்க விஜயம் இந்திய அமெரிக்க நல்லுறவு வலுவடைய உதவும் என்று வழக்கம் போல் சொல்லலாம்; அதோடு, வழக்கத்தைவிட அதிகமாகவே பாரதத்துக்குப் பயன் தருவதாக இருக்கும் எனவும் நம்பலாம்.

• வாஷிங்டன் செல்லும் வழியில் பெர்முடா கவர்னர் ஜெனரலுடன்.





• அமெரிக்காவில் வசிக்கும் இந்தியர்களுடன்...





• அமெரிக்காவில் நடந்த பாரதத் திருவிழாவின் துவக்க நாள் அன்று...



• விண்வெளி வீரர்களுக்குப் பயிற்சியளிக்கும் இடத்தில்...

• 'சேம்பர் ஆப் காமர்ஸ்' கூட்டத்தில் பேசுகிறார்.






# சட்டம் என்ன சொல்லுகிறது?

**வாசகர் கேள்விகளுக்கு பதில்கள் அளிப்பவர் வழக்கறிஞர் ஆர். எம். கிருஷ்ணராஜு.**

டி. வி. தங்கவேலு, துடுப்பதி, பெரியார் மாவட்டம்.

திருமண மண்டபங்கள், மற்றும் கோவில்களில் விசேஷ தினங்களில் விடிய விடிய ஒலிபெருக்கியை அலற விட்டுப் பிராணனை வாங்குகிறார்களே, அதைத் தடுக்க முடியுமா?

ஒலி பெருக்கி அலறலில் சென்னையில் தான் பிராணன் போகிறது என்றால், துடுப்பதியிலும் அதே கதிதானா!

இதற்கெல்லாம் தாவா செய்து, தடை உத்தரவு பெறுவதென்பது நடைமுறையில் சாத்தியமானது அல்ல. இந்த இம்சையிலிருந்து நம்மைக் காப்பாற்ற போலீசார் ஒலி பெருக்கி அனுமதிகளில் கண்டிப்பைக் கையாள வேண்டும்.

வயலின் ஒலி வாசலைத் தாண்டினால், கதவைத் தட்டுகிற மேனாட்டு போலீஸ் எங்கே? காதுகள் செவிடாகிக் கிடக்கிற நாம் எங்கே?

ரஷ்ய நாட்டில், 'இரைச்சல் எதிர்ப்பு இயக்கம்' உருவாக்கிப் பொது இடங்களில் அனாவசிய இரைச்சலை அடியோடு ஒழித்து விட்டார்கள்!

அமைதிக்கும், ஆரோக்கியத்திற்கும் உகந்த அந்த அற்புதமான நாகரிக மனோபாவம் நமக்கும் வரவேண்டும்.

எஸ். ஆர். கோபால், பெங்களூர்.

என் பக்கத்து வீட்டின் முன் தோட்டத்தில் சுமார் 30 அடி உயர மரம் இருக்கிறது. இதன் கிளைகள் என் வீட்டின் மேல் படர்ந்திருக்கிறது. அதன் உலர்ந்த இலைகள் வீட்டின்மேல் விழுந்து வடிகால் வசதியை அடைத்துக் கொள்ளுகிறது. மரத்தின் வேரினால் என் சுற்றுச் சுவரில் வெடிப்பு வேறு விழுந்திருக்கிறது. புயல் அடித்தால் அந்த மரம் என் வீட்டின் மேல்தான் விழும். நான் கோர்ட்டில் நடவடிக்கை எடுக்கலாமா?

அடுத்த புயல் அடிப்பதற்குள் நடவடிக்கை எடுங்கள்.

ஆபத்திற்கு ஆதாரமான அந்த மரத்தை நீக்கக் கோரி தாவா தாக்கல் செய்யுங்கள். அடுத்தவருக்கு ஆபத்தையும், இடைஞ்சலையும், ஏற்படுத்துகிற விதத்தில் துய்ப்புரிமைகளை சட்டம் ஒருகாலும் அனுமதிக்காது.

இரா. சம்பத்குமார், இராசிபுரம்.

வீட்டுச் சொந்தக்காரப் பெரியவரிடம் வாடகை பேசி, வாடகையை அவரிடம் மூன்று வருடங்களுக்கு மேலாகக் கொடுத்து வந்தோம். திடீரென்று அவரது மகன் "வீட்டுப் பத்திரம் என் மனைவியின் பெயரில் தான் உள்ளது. இனி வாடகையை எங்களிடம்தான் தரவேண்டும்" என்று வற்புறுத்துகிறார். பெரியவரோ "நான்தானே உங்களுக்கு வீட்டை வாடகைக்கு விட்டேன்" என்கிறார். இந்த நிலையில் யாரிடம் வாடகையைத் தருவது?

வாடகையைப் பெறத் தக்கவரின் உரிமையைப் பற்றி உண்மையான ஐயமோ, தகராறோ தோன்றினால், அத்தகைய ஐயமும், தகராறும் முறையான நீதிமன்றத் தீர்ப்பால் அல்லது உடன்படிக்கையால் தீர்கிறவரை, நீங்கள் உரிய வாடகையைத் தமிழ்நாடு கட்டிடங்கள் (வாடகை மற்றும் கட்டுப்பாடு) சட்டத்தின் 9வது விதிப்படி மனுச் செய்து கோர்ட்டில் கட்டி வரலாம்.

பிரேமா, காரைக்குடி.

என்னுடைய சகோதரி சென்ற ஆண்டு இறந்து விட்டாள். அவள் ஆசிரியை பணிபுரிந்து வந்தாள். வயது 45. அவளுக்கு 18 வயதில் ஒரே மகன் உண்டு. அவன் கருவாக இருக்கும் பொழுது அவளை விட்டுப் பிரிந்த அவள் கணவன் அதன் பின் அவளோடு சேரவே இல்லை. ஒரே ஊரில் வெவ்வேறு இடத்தில் வாழ்ந்தார்கள். ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொண்டாலும் பேசுவதே இல்லை! அவளுக்கு அவள் கணவர் மீது ஒரே வெறுப்பு. இந்த நிலையில் அவள் இறந்தபின் கிடைக்கும் பத்தாயிரம் பிராவிடெண்ட் பணம், மற்றவாவும் யாரைச் சேர்ந்தது? மகனுக்கா? கணவனுக்கா?

பேச்சு வார்த்தைகள் நின்றிருந்தாலும், வெறுப்புக்கள் வளர்ந்திருந்தாலும், கணவன், மனைவி என்ற சட்டபூர்வமான உறவு நீடித்துள்ள காரணத்தால், கணவனுக்கும், மகனுக்கும் உங்கள் சகோதரியின் சொத்துக்களில் சம உரிமை உண்டு.

டி. விஜயகுமார், சென்னை—20.

நான் சுமார் 10 ஆண்டுகளுக்கு முன்பு எனது வீட்டிற்குப் பக்கத்தில் தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்துக்குச் சொந்தமான காலி இடத்தில் தென்னம் பிள்ளை வைத்து இதுநாள் வரையில் வளர்த்துக் கொண்டு வருகிறேன். தற்போது இந்த மனை வேறு நபர் யாருக்காவது ஒதுக்கீடு செய்யப்பட்டால், நான் பிள்ளைப் போல வளர்த்த எனது தென்னை மரம் எனக்குச் சேருமா? அல்லது வேறு நபர்க்குச் சேருமா?

தென்னை மரம் உங்களுக்குரியது என்பதை மெய்ப்பித்தால், மனைக்கு எதும் ஊறு விளைவிக்காமல், மரத்தை அப்புறப்படுத்திச் செல்லும் உரிமை மட்டுமே உங்களுக்குக் கிடைக்கும். மரத்தின் மீதுள்ள உரிமையை நிலைநாட்டிக் கொள்ளவும், மரத்தை அப்புறப்படுத்திக் கொள்ளவும் அவசியமானால் தாவா தாக்கல் செய்யவும்.

கல்யாணச் சாப்பாடு போடவா, தம்பி கூடவா,

எச்சரிக்கை!.. எச்சரிக்கை!.. கல்யாண மண்டப ஒலி பெருக்கி இரைச்சலை நிறுத்தாவிட்டால் உடனே நடவடிக்கை எடுப்போம்!..

நீங்க அப்படியே அசையாமெ இருங்க!.. அடுத்த வீட்டு மரம் உங்க வீடு மேலெ விழுந்ததுக்கு நிரூபணமா ஒரு போட்டோ எடுத்துடலாம்!

வீட்டை இடிச்சு நாசம் பண்ணிட்டார்!

கேவலம் ரெண்டு மாச வாடகை பாக்கி கேட்டு அவர் போட்ட கூச்சல்லெ தான் வீடு இடிஞ்சு விழுந்தது!

என் மரம்!.. நான் எப்படியும் உபயோகப் படுத்துவேன்!

எல்லாத்துக்கும் சட்டம் ஒத்தாசை பண்ணும்னு சொல்லுவீங்க! மேஜை நாற்காலி காலுக்கு கூட புஸ்தகம் ஒத்தாசை பண்ற மாதிரி உங்க கட்சிக்காரருக்கும் எவ்வளவு ஒத்தாசை பண்ணுது பாருங்க!

கொர் - கொர்

எதிர்காலம் உங்கள் கையில்

# ஐ.ஏ.எஸ்.

## ஓர் அறிமுகம்

சந்திரமௌலி அவர்களுக்கு,

வணக்கம். என் மகன் ஐ. ஏ. எஸ். அதிகாரியாக வர வேண்டும் என ஆசைப்படுகிறேன். எங்கள் விருப்பமும் அதுவே. ஐ. ஏ. எஸ். பரீட்சை பற்றிய விவரங்களை 'எதிர்காலம் உங்கள் கையில்' பகுதி மூலம் விரிவாக எழுதினால் பலரும் பயனடைவார்களே!

நன்றி.

இப்படிக்கு,
தங்கள்
டாக்டர். எஸ். ஜெயராஜ்.
துறையூர்—621 010

* * * * *

டியர் டாக்டர் ஜெயராஜ்,

வணக்கம். ஐ. ஏ. எஸ். பரீட்சை பற்றி நான் தொகுத்த விவரங்களைத் தருகிறேன்.

ஐ.ஏ.எஸ்.மட்டுமில்லை; ஐ.எஃப்.எஸ்., ஐ.பி.எஸ்., இந்தியன் ஆடிட் அக்கவுண்ட்ஸ் சர்வீஸ், டிஃபன்ஸ் அக்கவுண்ட்ஸ் சர்வீஸ் என சுமார் 17 வகையானவை அடங்கிய க்ரூப்—'ஏ' மற்றும் இவற்றுக்கு அடுத்த கிரேடில் உள்ள 'க்ரூப்—'பி' என்று மொத்தமாய் 28 வகையான பதவிகளுக்கு யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷனால், ஆண்டுக்கு ஒரு தடவை, அகில இந்திய ரீதியில் நடத்தப்படுவது 'சிவில் சர்விஸஸ்' எக்ஸாம்.

இதை எழுதக் குறைந்த பட்சத் தகுதி ஏதாவது ஒரு டிகிரி. வயது வரம்பு 21—28. இருபத்தெட்டை அடுத்த வருடம் முதல் 26 ஆக்கப் போகிறார்களாம்.

இன்னொரு கண்டிஷனும் போடுகிறார்கள். ஒருவர் மூன்று தடவைகளுக்கு மேல், இந்தப் பரீட்சை எழுதக் கூடாதாம். இருந்தாலும் எஸ். ஸி. மற்றும் எஸ். டி. பிரிவினருக்கு இந்த 144 கிடையாது.

இதில் முதலாவது பிரிலிமினரி என்கிற வடிகட்டுகிற பரீட்சை. இதற்குப் பரீட்சை ஃபீஸ் உண்டு. வருஷத்துக்கு எப்படியும் ஒண்ணரை லட்சம் பேராவது இந்தப் பரீட்சை எழுதுவதாய்ச் சொல்கிறார்கள். இந்தப் பரீட்சை பற்றிய சில விவரங்கள்:

முழுக்க முழுக்க அப்ஜக்டிவ் டைப்தான். இரண்டு பேப்பர்கள். ஒரு பேப்பர் பொது அறிவு. இன்னொன்று அக்ரிகல்சரில் ஆரம்பித்து ஸுவாலஜி வரை ரேஷன் கியூ போல் நீண்டதொரு லிஸ்ட் தந்து அதில் அவரவர் விருப்பப்படி ஏதாவது ஒன்று. இரண்டு மணிநேரப் பரீட்சை. கேள்விகள் இந்தியிலும், இங்கிலீஷிலும் இருக்கும்.

மொத்தம் எத்தனை இடங்கள் வேகன்ஸியோ, அதைப் போலப் பத்து மடங்கு பேரை இந்த முதல் ரவுண்டு பரீட்சையில் தேர்ந்தெடுத்து, மெயின் பரீட்சை எழுத அனுமதிப்பார்கள். 'பிரிலிமினரி'யில் வாங்கின மார்க்கை அதன் பிறகு கண்டு கொள்ள மாட்டார்கள். பிரிலிமினரி மே, ஜூனில் நடக்கும்; மெயின் செப்டம்பர், அக்டோபர் வாக்கில் நடக்கும். பேப்பரில் இதுபற்றி வருகிற விளம்பரத்தைப் பார்த்து அப்ளை பண்ண வேண்டியதுதான்.

மெயின் எக்ஸாம், முழுக்க முழுக்க எழுதித் தள்ள வேண்டிய மூனு மணி நேரப் பரீட்சை. 'டிக்கிங்' கெல்லாம் இல்லை. ஆங்கிலம் தவிர மற்ற சப்ஜெக்ட்களை விருப்பமான இந்திய மொழியில் எழுத அனுமதி உண்டு.

கையெழுத்து அழகாய் இருக்க வேண்டுமாம். காக்காய் கிறுக்கலில் எழுதினால் மார்க்கைக் கொஞ்சம் குறைத்துப் போட அவர்களுக்கு உரிமை உண்டாம்.

ஒன்றுக்குள் ஒன்று என்ற மூன்று கோட்டைகளினுள்ளே இருக்கிறது ஐ. ஏ. எஸ். என்கிற அரியாசனம். பிரிலிமினரி, மெயின் பரீட்சைகள் என்கிற இரண்டு கோட்டைகளை வென்று மூன்றாவது கோட்டை வாசலுக்குப் போகிறீர்கள். அது இன்டர்வியூ கோட்டை. அதையும் நீங்கள் வென்றாக வேண்டும்.

இன்டர்வியூ போர்டில் இருப்பவர்கள் போட்டுக் குடைந்து எடுத்து விடுவார்கள். இதற்கு 'செமை' பிரிபரேஷன் வேண்டும்.

இப்படியாக மூன்றாவது கோட்டையையும் தகர்த்து விட்டு உள்ளே போனால் அங்கே கியூ நிற்கும். அவரவர் மெரிட் ராங்க் படி இடம் கிடைக்கும். எத்தனை வேகன்ஸியோ, அத்தனை பேருக்கு அப்பாயின்ட்மென்ட்.

ஐ. ஏ. எஸ். இத்யாதிகளுக்கு கேஷுவல் பிரிபரேஷன் எல்லாம்... ஸாரி... நோ யூஸ். சில வருஷங்களுக்கு முன்பாகவே, திட்டமிட்டு, மிகவும் ஸின்ஸியராய் முயற்சி செய்ய வேண்டும். மூன்று கோட்டைகளையும் வெற்றி கொள்ள 'திட்டமிட்ட, கடுமையான உழைப்பு' என்கிற 'தாயத்து' கட்டிக் கொண்டு புறப்பட வேண்டும்.

ஆல் தி பெஸ்ட்.

கடைசியாக, ஜெயராஜ் சார்! பிற்காலத்தில் உங்கள் மகன் ஐ. ஏ. எஸ். அதிகாரியாய் வந்தால், மறக்காமல் எனக்கு ஸ்வீட் அனுப்பி வையுங்கள்!

அன்புடன்,

எஸ். சந்திரமௌலி.

---

''சிறந்த நடிப்பிற்குரிய இலக்கணம், ஒருவர் பார்த்தவுடன்



நாமும் செய்யலாம் என்ற எண்ணத்தை உண்டாக்க வேண்டும். ஆனால் செய்ய ஆரம்பித்தால், ''செய்ய முடியவில்லையே'' என்று வருந்த வேண்டும். இந்த இரண்டுக்கும் இடையே உள்ளதுதான் நடிப்பினுடைய இலக்கணம்.''

—அறிஞர் அண்ணா.

—பொ. உ. சேஷாத்திரி.

# கண்ணா வா! வா



'யுகந் தொறும் தருமம் காக்க
உதித்து நான் வருவேன்' என்று
செகம்புகழ் கீதை தன்னில்
செப்பினாய் பார்த்தன் முன்னே.
மிகுந்திடும் அநீதி எல்லை
மீறிடக் கண்டும் சற்றும்
முகம் கடுத் திடுதல் இன்றி
முறுவல் நீ செய்கின் றாயே!

அன்றொரு சகுனி செய்த
அருஞ்சதிச் சூதால், நல்லோர்
சென்றனர் கானம்; பின்னர்
திரிந்தனர் ஒளிந்து வாழ்ந்தே
இன்றுபல் லாயிரம் பேர்
எங்களில் சகுனி யானார்,
என்றிடும் போது நாங்கள்
என் செய்வோம் நீயல் லாது.

நெஞ்செலாம் நஞ்சு வைத்து
நேர்மையைப் புதைத்து விட்டு
வஞ்சகம் வாகை சூடி
வலம்வரக் கண்டு, மக்கள்
அஞ்சியே பணிகின்றார்கள்
அரக்கு மாளிகையை நம்பித்
தஞ்சமும் அடைகின் றார்கள்
தடுத்திட நீ வாராயோ?

பாரதக் களத்தில் அன்று
பகைவராய் உறவே மாறி
வீரனும் காண்டீ பன்முன்
வில்லொடு நிற்கும் போது
'யாரென்ற போதும், செம்மை
அறம்துறந் தாரே யானால்
போரிடு' என்று சொன்னாய்.
இன்றது பொருந்து மன்றோ!

பின் அட்டை வண்ணப் படம்:
திலீப் பானர்ஜி

## குயிலன்

# குற்றவாளிகள் அமைச்சர்களானால் போலீஸ் யாரை விசாரிப்பது?

"எல்லா கிரிமினல் குற்றவாளிகளும் மந்திரி ஆகிவிட்டால் ஒரு குற்றவாளியையும் காவல்துறையால் விசாரிக்கவோ, தண்டிக்கவோ முடியாது!" — என்று மேற்கு வங்க சி.ஐ.டி. டிபார்ட்மெண்ட் அலுத்துக்கொண்டது. ஏன் இவ்வளவு விரக்தி?

ஜோதிபாசு மந்திரி சபையில் 'சிவில் டிபன்ஸ்' துறை மந்திரி ராம் சாட்டர்ஜி. இவருக்கு எப்போதும் துப்பாக்கி மீது ஒரு வெறி கலந்த அன்பு. ஏதாவது சண்டை சச்சரவு என்றால் நேரே ரிவால்வரோடு போய் களத்தில் இறங்கிவிடுவார். அப்படித்தான் சென்ற ஆண்டு ஜூலை மாதம் 8-ம் தேதி மந்திரிக்கு ஒரு செய்தி வந்தது — "உங்கள் மருமகன் பாப்லாவை அனிஸ் என்பவர் தாக்கிவிட்டார்" என்று! கோபம் கொப்புளிக்க அந்தப் பகுதிக்கு விரைந்து வந்தார் மந்திரி. ரிவால்வரைக் கையில் எடுத்தார். மேல் நோக்கி இரண்டு ரவுண்ட் சுட்டார். தனது மருமகனைத் தாக்கிய அனிஸ் நெற்றிப் பொட்டில் ரிவால்வர் முனையை வைத்துக் கொண்டு, சுட்டுவிடப் போவதாக மிரட்டிக் கொண்டிருந்தார். நல்லவேளையாக சமயத்தில் போலீஸ் வந்து சேர்ந்தது. ஒரு மந்திரி கொலையாளியாகிற அரசியல் அசிங்கம் தடுக்கப்பட்டது.... இந்த நிகழ்ச்சி தொடர்பாக மந்திரி மீது ஏழு செக்ஷன்களில் வழக்கு போடப்பட்டது. விசாரணை தொடங்கியது. ஆனால் மந்திரி ஒரு நாளும் விசாரணைக்கு வரவில்லை. காவல்துறை, சி.ஐ.டி. துறை அதிகாரிகள் எவ்வளவோ முயன்றும் ஒன்றும் செய்ய முடியவில்லை. மந்திரி அடமாக வரமறுத்து விட்டார். விசாரணை முடியாமலே மத்திய உள்துறைக்கு ஒரு ரிப்போர்ட்டை அனுப்பிவிட்டு சி.ஐ.டி. இலாகா ஒதுங்கிவிட்டது.

இந்த ராம்சாட்டர்ஜி இடதுசாரி அரசில் அங்கம் வகிக்கும் பார்வர்ட் பிளாக் (மார்க்ஸிஸ்ட்) கட்சியைச் சேர்ந்தவர். இரண்டு எம்.எல்.ஏக்களைக் கொண்ட இந்த கட்சியின் தலைவர். இந்த கட்சி நேதாஜிசுபாஷ் சந்திர போஸ் தொடங்கிய பார்வார்ட் பிளாக் கட்சியிலிருந்து பிரிந்து வந்தது. ஏன் பிரிந்தார் இவர்?



ராம்சாட்டர்ஜி: வித்தியாசமான அமைச்சர்!

1953-ம் ஆண்டு பூரியில் நடந்த பார்வர்ட் பிளாக் கட்சியின் மாநாட்டில் கலந்து கொண்டு இவரும் இவரது முந்நூறு ஆதரவாளர்களும் திரும்பினர். ஆனால் ஓசிப் பயணம் செய்ததால் கைது செய்யப்பட்டனர். இது பார்வர்ட் பிளாக் கட்சிக்குப் பெரிதும் அவமானமாக இருந்ததால் அவர்களைக் கட்சியிலிருந்து நீக்கிவிட்டனர். அதனால் அதே ஆண்டு ராம்சாட்டர்ஜி இந்தக் கட்சியைத் தொடங்கினார்.

கல்கத்தாவிலிருந்து 42 கி.மீ. தொலைவில் உள்ள சந்திர நாகூர்தான் இவரது ராஜாங்கம் நடக்கும் டவுன். 1952-ம் ஆண்டு பத்ரேஸ்வர் தொகுதியில் போட்டியிட்டார். ஆனால் பிரபல காங்கிரஸ் தலைவர் ரேணுகா ராயை தாக்கியதாக ஓட்டுப்பதிவுக்கு சில நாட்களுக்கு முன் கைது செய்யப்பட்டார். தேர்தலிலும் தோற்றார். ஆனால் 1967ம் ஆண்டு அதே தொகுதியில் வெற்றிபெற்றார். அதிலிருந்து 1969, 1977, 1982 ஆகிய மூன்று முறையும் இதே தொகுதியைத் தக்க வைத்துக் கொண்டுள்ளார்.

இவர் மீது எவ்வளவோ கேஸ்கள் இருக்கின்றன. ஆனால் அரசியல் செல்வாக்காலும், முதல் மந்திரி ஜோதிபாசுவின் நெருங்கிய ஆதரவாளர் என்பதாலும் எந்த நடவடிக்கையும் எடுக்க இயலவில்லை.

ஜோதிபாசுவுக்கும் இவருக்கும் அப்படி என்ன நெருக்கம்?

சீனப்படையெடுப்பையொட்டி 1962ம் ஆண்டு இந்தியாவெங்கும் கம்யூனிஸ்ட்கள் கைது செய்யப்பட்டனர். ஜோதிபாசுவும் கைது செய்யப்பட்டார். அப்போது பொது மக்களின் கோபத்திற்கு ஜோதிபாசுவின் குடும்பம் பலியாகிவிடக் கூடாது என்று இதே ராம்சாட்டர்ஜி அல்லும்பகலும் எந்திரத் துப்பாக்கியோடு வீட்டுக்குப் பாதுகாப்பாய் நின்றாராம்!

ஆதாரம்: இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி.

— திலீபன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran




# ராகமாலிகா பட்டு சேலைகள்

**சுகன் ஆர்கேட்,**

**நெ. 12பி, நாகேஸ்வரராவ் ரோடு,** பனகல் பார்க் எதிரில்

**தியாகராய நகர், சென்னை-600 017**

(ஞாயிறு கடை உண்டு)

